ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இருசமய விளக்கம்.

தெய்வப்புலமை

அரிதாசர்

அருளிச்செய்தது

இஃது

வடகரை வித்வான்

[illegible]ளிக்கூடம் சிங்கமய்யங்காரால்

சிலவித்துவான்கள் முன்னிலையில்

பரிசோதிக்கப்பட்டு

உ.-நி-தி-அழகரய்யங்காராலும்,

கோ-இ-சேஷய்யங்காராலும்,

தி-பிச்சுவய்யங்காராலும்,

டி - சுப்பராயமுதலியா ரவர்களாலு

சென்னை:

பாப்புலர் அச்சுயந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வஜித்து ௵ சித்திரைமீ.

ஹ ரி ஓ ம்.

# இருசமயவிளக்கத்தின் அட்டவணை.

| பக்கம். | காண்டங்களும, படலங்களும், பரிச்சேதங்களும். | பாசுரத் தொகை. |
| --- | --- | --- |
| ௱௧௩ | ௫-வது, எண்ணெழுத்தி னைன்முனபிரணவப்பரிசசேதம | ௰௧ |
| ௱௰௪ | ௬-வது, ஸ்ரீமத்தட்டாக்ஷர பெரியதிருமந்திரப்பரிசசேதம் | ௰௭ |
| ௱௰௭ | ௭-வது, தேகநிலைவைதிகதத்துவப்பரிசசேதம் | ௩௰ |
| ௱௨௰ | ௮-வது, அச்சராதிப்பரிசசேதம. | ௰ |
| ௱௨௨ | ௯-வது, சித்துநிலைவபேதமாயாவாதகண்டனப்பரிசசேதம். | ௧௭ |
| ௱௨௪ | ௨-வது, சைவமோகனுகமமறுப்புப் படலம். | ௭௫ |
| ,, | ௧-வது, தேகநிலைசைவதத்துவமறுப்புப் | ௨௰ |
| ௱௨௬ | ௨-வது, சிவபூசைமறுபபுப்பரிசசேதம் | ௮ |
| ௱௨௭ | ௩-வது, சிவபதமுததிமறுப்புப்பரிசசேதம் | ௩௨ |
| ௱௨௯ | பவுண்டரிகன்கதை. | |
| ௱௩௰ | சாதனை யோகனு செய்த சங்கரசசிவன்கதை. | |
| ௱௩௪ | ௪-வது, சிவனின்மாலியமறுப்புப்பரிசசேதம் | ௧௫ |
| ௱௩௫ | ஞவாநமபொசிதத மண்டுகேத்தின்கதை, | |
| ௱௩௬ | ௩வது, வைதிகதிருவாராதனைப் படலம். | ௧௩௪ |
| ,, | ௧-வது, விட்டுணு பூசைவைபவப்பரிசசேதம் | ௩௮ |
| ௱௪௧ | ௨-வது, சதுவிதப்புருடார்த்தப்பரிச்சேதம் | ௨௯ |
| ௱௪௪ | ௩-வது, பரமபதப்பரிசசேதம் | ௧௫ |
| ௱௪௬ | ௪-வது, தீாத்தப்பிரசாதவைபவப்பரிச்சேதம் | ௩௮ |
| ௱௫௧ | ௫-வது, வேதவியாசாசத்தியப்பரிச்சேதம். | ௧௪ |
| ௱௫௩ | ௪-வது, வேதவிரோதநூல்வர்க்க கண்டனப்படலம். | ௱௧௪ |
| ,, | ௧-வது, சைவசகளநிட்கள விசேடப்பரிச்சேதம் | ௪ |
| ,, | ௨-வது, சகளநிட்களகண்டனப்பரிச்சேதம். | ௨௯ |

முற்றும்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

## தனியன்கள்.



### விருத்தம்.

விரிதாதுகமழ்துளவத் தொடைமாயன்பழவடியே
　　வேதநூசாகை
பெரிதாகமொழிவதனை மோகனசாத்திரமயக்காற்
　　பிணக்குப்பேசிக்
கருதாதகயவாதமை யறுத்துமிகச்சினந்தெழுகூடாக்.
　　கதிர்வாளான
அரிதாதனிருசரண மெந்நாளுந்தொழுதேத்தி
　　யகத்துள்வைப்பாம். (க)

விரியோதநெடுங்கடல்சூழ் வியனுலகிற்கமலவிழி
　　மேகமேனிக
கருதாதிபகவனுல கெவ்வுயிரும்படைத்தளித்துக
　　காக்குந்தன்மை
பிரிவேதுமில்லாது பழமறைகடுணிபொருளைப்
　　பேணிப்பேசும்
அரிதாதனிருசரண மெனதுசிரத்தணிந்துதுய
　　ரகற்றினேனே (உ)

### வேறு.

பதுமமலர்மகண்மார்பன் வளரொளிர்முகுந்தனே
　　பரவுதசசதமோலி திகழ்முடியனந்தனே

பயிலவழங்கியசேனை முதல்வனெனுநம்பனே
பலவுகனிபொழில்மேவு குருகைவருமொய்ம்பனே
சதுரவேதிபதியோபொன்மதிலுயரரங்கனார்
தமதுசெவியுறுகேள்வி யிதமொழிபிரசங்கனே

சகமதனிலெவரோவிவ் வடிவுகொடிணங்கினோர்
தவசுருபமிதுவாகு மெனவிவணடைந்துசோ
விதமுறுமரன்மாய னிவாதரமிலஙகுமா
வியனியல்புபெறவோது பெயாகுணநிறைந்துசீர்

விபரமவைவெளியாக வரியமறையங்கமாய்
மிருதிசுருதியிதிகாச முதலுளவரமபினூல்

அதுலவபிநவவாயமை யுனாகளிலடங்கிநீ
டமைதிபெறுபிரமாண வகைதொகைசெய்தின்பமே
அயரிருசமயதீப விரிபனுவலெங்களபால்
அருளபுரியுயரிகாச ரடிபிணையினறஞ்சவாம்.

---

## நூற்பயன்.

வளங்கெழுசெல்வமுணடா மனககருததெல்லாமுறறும
களங்கமின்ஞானமெயதுங காட்சிசோமுததிவாயககும
தளங்கமழ்துளவக்கோலத் தாரரிதாதன்வாககால்
விளங்கிருசமய நூலின் மெயப்பொருள்விரும்புவோர்ககே. (க)

கண்ணகல்ஞாலத்தீருங் கருப்பறழையறுககவேணும்
எண்ணியவெண்ணியாங்கே யெண்மையினெய்தவேனும்
நண்ணிருசமயமாண்பு நன்கறிவிளக்கமேபோல்
திண்ணநூறபிறிதொன்றின்மை தெரிநதிடாவிளாந்திடீரோ. (உ)

வேறு.

இந்துதவழமைபம்பொழில்சூழ் வளமிக்கஅரிதைநக
ரிறைவனென்னும
மந்தரபுயதரண்ண ஸ்ரீதாதனருள்சுரந்து
வகுததுசெய்த

முந்தைநாளிருசமயவிளக்கப்பெருநூலொருகவியை
மொழிந்தோர்கற்றோர்
பைந்தளவப்பரஞ்சுடரி னருட்பேற்றுனிபரமும்
படைப்பாமாதோ (௩)

பொய்மைபுகலாகமவாதியாகள் செருக்குத்திமிரம்
புடைபோக்தோட
மெய்ம்மைபெறுபரவத்து விண்டுவெனயாவருக்கும்
விளக்கமாக
மும்மையெனுந்தமிழ்ப்புலமை யேறரிதாதன்பரிந்து
மொழிந்தவிந்தச
செம்மைபுறுவிருசமய விளக்கமுணரறிஞர்கள்போற்
றிநிற்போர்யாரோ (௪)

வேறு.

இருசமயவிளக்கமெனப்போ
வருமாநூலெபுவி.வாய்ந்திட லாலிப்
பெருமாமன்னுயிர் பேதைமைநீங்குற்
றிருமாமுத்தியை யேயவதுதிடனே. (௫)

வேறு.

வேதமேமுதலவாய விண்ணவர்முனிவரோனோ
ஓதுநாறபுராணஞ்சிற்ப முறுபுறத்துறைநூன்மற்றும்
நீதியினுணாந்தோராவா நீடிருசமயத்தன்மை
போதமுறவிளக்கநூலைப் புனையறதெரிநல்லோரோ. (௬)

பொன்னிதழ்மலாத்தண்டேனைப் புரிந்தயில்சுரும்பரொன்ன
மன்னிருசமயநீரமை வகுக்குநல்விளக்கநூலை
நன்னாயெயயறிஞாகொள்வா நாறுபுண்ணீருண்ணீப்போல்
அன்னியபுன்னூல்வேட்ப ரறிவழிமாந்தர்மாதோ. (௭)

வேறு.

ஆரணத்தின்சாரமென்கோ ஆரிடத்தினுரையென்கோ
வணிவேதாங்க
காரணநூறகருத்தென்கோ கனதமிழ்வாரிதிக்கோளிதண்
கதிரோயென்கோ

தாரணியுமிருபுயக்குன் றரிதாதஜ்ஞனருளாற்
றந்தவாய்மைச்
சேரணியுமிருசமய விளக்கமென நவிழிப்பொருளைத்
தெருங்காலே. (அ)

---

## பழிச்சினர்ப்பரவல்.

செதுமதியரிநம்புகூர் சிறியவரொடிணங்கியே
திரிதருமெனையன்பின்வா சிலவுறுதிவிளம்புகேம
இதுபொருண்மருடங்கிடா தினிதுணர்தியென்றுநீ
டிருசமயவிளங்குநூ லெனதிதயமழுந்தவே
முதுகுருவடிவங்கொளா முறைதவறுதலின்றியே
முழுவுறவகளங்கமாய மொழிமுதன்மையனெமபிரான்
மதுகையிலுயர்சிங்கமேர் வயிணவகுலதுங்கனும்
வடிவழகியநம்பிசே வடியிணைகள்வணங்குவாம். (க)

வேறு.

சுந்தரமிலங்குபழ மறைகட்குமாறுய
சொல்லுமெழுநான்காகமம்
துன்மார்க்கமென்றுதெரியாமற்புகழ்ந்திடுந்
துட்டாகளசெய்செருவடங்க
வந்தனைகருகன்மா லென்றுவெளியிட்டாண்ட
வடிவழகியநம்பிபொன்
மலரடிபணிந்துநங் குருவாயுடைந்துமிக
மணமகிழ்ந்தேயுயர்ந்தோன்
சந்ததஞசிறியவர்க ளோடேயிணங்கித்
தலத்திற்றிரிந்தவென்னைத்
தயையினுலேயழைத் திருசமயநூலினைச்
சங்கையறவோதியேநீ
சிந்தையினினித்தெளிந் தேயுறிந்திடெனவுரை
செப்பியறிவித்தவாசான்
செயசமயசிங்கேறு பெத்தபெருமாளெனுஞ்
செல்வனடிபோற்றுவோமே. (உ)



ஹரிஓம்.

ஸர்வம்விஷ்ணுமயமஜகத்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

    

அரிதாசர் திருவடிகளே சரணம்.

# இருசமய விளக்கம்.

முதலாவது

## பாயிரகாண்டம்.

### க - வது, கடவுள்வாழ்த்துப்படலம்.

நீரேற்றபாரில்உயராதுறுநீடுஞானம்
கூரேற்றசிந்தைஎதிராசாகுலத்துளானை
போரேற்றுநாயன்தனைவாழபெரும்பூதூரானை
சீரேற்றசெல்வக்குருராயனைச்சிந்தைசெய்வாம். (க)

அலையிட்டநீரைஅடக்கும்வடவானலம்போல்
தலையிட்டுவாதுமுயல்சாக்கியர்தம்மைவென்று
மலையிட்டதீபம்எனமால்சமயத்தைமண்மேல்
நிலையிட்டபூதூர்எதிராசனைநெஞ்சில்வைப்பாம். (உ)

கமிழ்கின்றவாசவகுளச்செழுங்கண்ணிஅம்தேன்
உமிழ்கின்றதிண்தோள்அரசைப்பவஓதநீக்குள
அமிழ்கின்றஎன்னைக்கரைஏற்றுதற்காகவேதம்
தமிழ்செய்தஞானக்குருகூரனைத்தாள்துதிப்பாம். (ங)

நாலுமுகம்ஆய்நவில்வாணிஎன்நாவில்மேவ
மாணூர்அயன்அங்கவர்போல்பலமாக்கணங்கட்
காணுதுகரத்துளவேத்திரத்தையர்தெய்வச்
சேனைபதியாமலர்த்தாள்இணைசென்னிவைப்பாம். (ச)

கிரிபோல்விளங்கிக்கிளரும்புயக்கிட்ணராயன்
தரைமீதுசிங்காத்திரியில்செயத்தம்பம்நாட்ட
வரம்ஆதரவால்அளித்தேவடகூவம்மேவும்
கருமாமணிவண்ணனைநீடுகருத்தில்வைப்பாம். (ரு)

படமாசுணமும்முதிராஇளம்பச்சைஆலும்
திடமாமறைஅந்தமும்ஆகிநற்செல்வன்ஆன
வடமாமலைஅண்ணனைதுள்ளமும்வைகநாளும்
இடமாம்ஒருவற்கடியோங்களியாங்கள்தாமே. (சா)

விரிதாதணியும்தொடைமேவியவேந்தன்ஆன
அரிதாதன்கீர்த்தனைத்தளவாமமுடித்தாண்டகோவை
தெரிதாதரவேதகிரித்தடச்செங்கண்மாலை
பெரிதாதரிப்பாக்கரிதோபிறவாதபேறே. (எ)

க-வது கடவுள்வாழ்த்துப்படலம் முற்றும் ஆ திருவிருத்தம் (எ)

அரிதாசர் திருவடிகளே சரணம்.



## உ - வது, நூற்பெயர் விளக்கப்படலம்.

பூண்கின்றபணைவியால்ஒளிர்பூதநாதன்
சேண்கொண்டலைநோதிருமேனிஅம்தேவன்என்ன
மாண்கொண்டவருள்பரவத்துவைவண்மைஆக
காண்கின்றதுவேதமியேன்தன்கருத்துமாதோ. (க)

சதுவேதமும்ஆகமமும்கொடுசார்ங்கபாணி
விதுவேணியினன்எனும்மூர்த்திகள்மேன்மைநோக்கில்
கதுவேழ்கடல்சூழ்உலகத்தவர்கட்கெலாம்அங்
கதுவேஅதுவேபரம்ஆய்வியப்பாகையாலே. (உ)

ஏர்ஆரணம்ஆகமம்நீடிதிகாசம்ஆதி
சாராவாகிய நூல்பொதுநூல்கொடுதத்துவத்தை
ஆராயும்இடத்தரன்மால்புகழ்அங்குணாக்கும்
சீராணமொழிக்கெதிர்உத்தரம்செப்பவேண்டி. (ந)

திரமாகிய ஆகமமேஞ்ருசெய்யமாதும்
அருமாமறைமற்ருெருதோகையும்ஆகநாட்டி
ஒருமாதுறைபாகனேமாலேஉகந்துபோற்றும்
இருமாசமயத்துவிளக்கம்இயம்பல்உற்றேன். (ச)

ஒருதேவதையேஉலகுக்குயர்நாதன்என்ன
அருமாமறைநிச்சயித்தோதி அமைத்திருக்க
இருமாசமயத்துவிளக்கம்என்றிந்தநூற்கு
திரமாகியபேர்வருகாரணம்செப்பவேண்டில். (ரு)

திரம்பூந்தியஇப்பெருநூலில்செகம்தனக்கு
பிரமங்கள்இரண்டுளஎன்றுபிரித்ததில்லே
இருமைசசிவன்மால்சமயங்களே இன்ன இன்ன
தரமஎன்றுவிளக்கியதாதலில்தக்கதாமே. (சு)

நூலீதுறைசெய்திடநான்நுவன்றிங்குநாட்டும்
வேலேயவிழியாாகளில்முக்கணன்வீறுமைப்பாள
பாலேய்மொழி ஆகமவல்லிஅப்பங்கயக்கண்
மாலேபரமஎன்பவள் ஆரணவல்லிஎன்பாள். (எ)

அப்பாவைமாாகள் இருவோரும்அறைந்ததாக
இப்பார்மதிக்கஇயலும்பதினெண்புராண
வைப்பானசொல்லும்உயாவைதிகவாகரும்எல்லாம
ஒப்பாகஞாலத்தினில்கூட்டிஉரைக்கல்உறறேன். (அ)

உ-வது, நூற்பெயர்விளக்கப்படலம்முற்றும். ஆ. திருவிருத்தம். (கரு)

அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

## ௩ - வது, விடயத்திறப்படலம்.

தாதார்துளவத்தரிசங்கராதம்மைஏத்தும்
வேதாகமத்தைத்தெரிந்தோதும்இம்மெய்ம்மைநூலில்
தீதேதும்இலாவிடயத்தின்திறங்கள்தம்மை
ஏதேதியல்பால்சொலிநாட்டியதென்றுகேட்கில். (க)

பேரின்னன ஆய்ந்திகழ்கின்றஇப்பெண்கள் ஆழிப்
பாரும்திசையும்படர்கார் இருள்பாறிஓட
ஊரும்கதிரோன் மகரத்தைவந்துற்றபோதில்
சீரொன்றிய ஆரணிமூழ்கிடச்சென்றஆறும். (உ)

தண்ணம்புனலில்படிவேலையில்தன்தனுதாம்
எண்ணமபயில்சங்கரர்நாரணர்என்றுளோரை
நண்ணும்பரம்என்றிருவோரும்நவின்றஆறும்
வெண்ணன்நகையார்க்கதில்ஈசுவிளைந்தஆறும். (௩)

ஏராரணிமாநதியின்கரைஎய்திவேத
ஆராமம்அணைந்ததில்எயதியஅந்தணர்
நேராகியசந்நிதிமன்னியநீள்கண்மாறா
சீராகியதத்துவநிசசயமசெய்தஆறும. (௪)

திரம்ஆகியதத்துவநிச்சயமசெய்தபோதில்
மருமேவியவார்குழல்ஆகமவல்லிஎன்பாள
பொருவாகியஆகமசைவபுராணம்ஆதி
விரிவாகியபல்வகைநாலும்விரிததஆறும். (௫)

ஓல்லும்படிஇப்பெருநூறபொருள்ஓர்ந்துமேலே
சொல்லும்படியேநினைவாகிததுணைத்தனங்கள்
வல்லின்படிஆம்இவளபாரில்வழக்கைமுந்தி
செல்லுமபடிதன்விரகால்உரைசெய்தஆறும். (௬)

திரம்ஆகியபாரவழக்கமதனில்சிறப்பநூலால்
அரவாபரணத்துமைபாகன்அலாதபோககு
மருவாலயத்தில்பிரமததலமாப்பதிட்டை
உரையாதெனநீடுலகததில்உரைகருமஆறும். (௭)

தண்ணம்புலிசோசடையறகுயாசாரஙகபாணி
எண்ணுமபரிவாரமதாகிஇருக்கும்ஆறும்
வண்ணமகரியமதுசூதன்வராகமஆகி
நண்ணுமசிவன்மெல்அடிதேடிநடந்தஆறும. (௮)

அரிமோகினிஆய்அரனைப்புணாந்தையனை
தனையோாஅறியும்படிபெற்றதுமசககரக்கை
கருமாமுகில்மானுமநன்மேனிஅமகஞ்சநாபன்
வருசாபவசதநினன்என்னவகுததஆறும். (௯)

நககன்தனைஇன்றியவேளவிநடத்திவேதா
மெய்ககண்ணன்எனததகுதேவாவிளிந்தஆறும்
மையக்கநதரன்ஓாசரபத்துருவாகிவந்து
செயககன்நரகேசரிதன்னைச்செயித்தஆறும். (௰)

செம்பங்கயமேல்உறைநான்முகன்தேர்கடாவ
நம்பன்புரம்மூன்றெரிஏறநகைத்தநாளில்
வெம்புஞ்சினவெவ்விடையும்மகமேருவில்லுக்
கம்புமெனநின்றரிஏவல்புரிந்தஆறும். (கக)

ஆகாசமோடுதிசைஎங்கணும்அங்கிபொங்க
காகோதரத்தில்உயர்வாசுகிகான்றவெய்ய
மாகாளகூடந்தனையேமுனம்வானுளோர்கள்
நோகாமல்அந்தமகதேவன்நுகர்ந்தஆறும். (கஉ)

மாயன்கயிலைக்கிரியானிடைமைந்தன்வேண்டி
போய்நின்றதுவும்பரசாயுதப்போரஇராமன்
ஏயுஞ்சிவன்ஆமசமதங்கிஇடத்துதித்து
காயும்படைவிஞ்சையும்ஈசனிற்கற்றஆறும். (கங)

ஆசற்றுயர்பாசுபதத்தைஅருச்சுனற்கா
ஈசற்கிதம்மாயவன்பேசிஇரந்தஆறும்
காசற்றொளிர்பூண்மதுசூதனன்கண்இடந்தே
பூசித்ததனால்அடல்ஆழிபொறுத்தஆறும். (கச)

பொடிபூசியைமைக்கடற்சேதுவில்பூசைசெய்து
சுடாவேல்இராமன்பிரமத்திதொலைத்தஆறும்
இடம்ஆகியகாசியில்எயதியயாவருக்கும்
அடைவேபரிவால்அரன்முத்திஅளிக்கும்ஆறும். (கரு)

உரைபற்றியநீற்றுபஞ்சாக்கரருத்திராக்க
தரணத்தியல்பால்உயர்புண்ணியம்சாரும்ஆறும்
பொருவற்றிடுநற்சிவதீக்கையும்பூசைதானும்
இருமைக்கும்இசைத்திடுசாதனம்என்றஆறும். (கசு)

உன்னும்சரிதைகிரிகைத்தொழில்யோகம்ஞானம்
என்னும்திறத்தால்மனம்ஏகம்உற்றேத்துவார்க்கு
பன்னும்படிஆகியநாலுவகைப்பதங்கள்
கொன்னின்றமழுப்படைஈசாகொடுக்கும்ஆறும். (கஎ)

தன்னைப்பணிந்துதவம்செய்திடுவோர்தமக்கு
பின்னைக்கெனுதுபெருமாவரப்பேறுநல்கும்
பொன்னைப்பொருதேஅரன்அன்றிஇப்பூதலத்தில்
மன்னற்குரியாரெவரென்றுபகர்ந்தஆறும். (கஅ)

வீறாகியநற்சிவநூலில்விரிந்ததொண்ணூற்
றாறும்உடல்தத்துவத்தன்மையும்அஞ்செனப்பேர்ப்
பேறாகியதீக்கையும்முத்தினைப்பேதம்ஆறும்
தேறாதவர்முத்தர்கள்அல்லெனச்செப்பும்ஆறும் (௧௯)

பொருவார்மலர்ஐங்கணைகொண்டெதிர்போர்செய்வேளை
எரிஏறவிழித்தருள்சங்கரன்என்னும்மூர்த்தி
அருநால்உருநால்அருவோடுருஒன்றவைக்கும்
பரம்ஆய்உறையும்படிதன்னைப்பகர்ந்தஆறும். (௨௰)

தனையைத்தொடங்கித்தொகைசெய்திடுதத்துவங்கள்
இருபத்துநாலும்உயர்மாயைகள்ஏழும்அஞ்சாய்.
திரம்உற்றிடுநீள்சிவதத்துவமும்தெளிந்தோர்
வரமுத்தர்கள்என்றுனைசெய்திடும்வாய்மைதானும்· (௨௧)

பெருக்கும்பயபத்தியினோடுபிராணலிங்கம்
தரிக்கின்றவரும்சிவன்ஆகும்அத்தன்மைதானும்
தெரிக்கின்றஈசன்திருமாலியம்தீண்டஒண்ணா
திருக்கின்றதுநின்மலர்இன்மையின்என்றஆறும். (௨௨)

ஆனைப்புவியில்பணிகின்றதும்ஐம்முகன்பால்
சேரப்பெறும்என்பதும்நற்குணச்செய்கையாலே
நேரற்றவன்அங்கவன்ஆகியநீர்மைதன்னால்
பாரிற்பகவான்எனும்நாமம்படைத்தஆறும். (௨௩)

நடைமன்னியநான்மறையில்தெளிநாரணனை
நிடம்என்பதனில்கிரணம்புனைநீடுசூலப்
படைமன்னியபங்கயச்செங்கரப்பாவைபங்கன்
இடம்மன்னும்உபாசனையேசொனதென்றஆறும். (௨௪)

மயம்மிக்குயர்ஏழ்பரிச்சூரியமண்டலத்தில்
இயல்புற்றிடுசோதியதாகிஇருந்துதன்னால்
நியமப்படுமேபல்உயிர்தம்மையும்நீடுநெஞ்சம்
முயல்விப்பவன்முக்கணன்என்னமொழிந்தஆறும். (௨௫)

கேள்விப்பசுவின்பதிஆகிகிளர்ந்துளானும்
வேளவித்துறைஉற்றவிப்பாகம்விரும்புவானும்
வாழ்வுற்றவேள்விப்பதிஆகிவயங்குவானும்
நீளவெற்றிமழுக்கரன்என்னநிகழ்த்தும்ஆறும். (௨௬)

முற்றும்பகர்ந்துவிரகாகமுடித்தபின்பு
மற்றங்கவளுக்கெதிர்ஆரணவல்லிஎன்பாள்
நற்றும்சுருதித்தொகையும்மறைநாலின்அந்தம்
பற்றும்நியமோபநிடங்கள்முப்பத்திரண்டும். (௨௭)

வருதாமதராசதசாத்திகவண்புராணம்
உரவோர்தெளிசீர்உபபாரபுராணமோடும்
அரிதாம்மிருதித்தொகையும்அதனுக்கிசைந்த
விரிவாம்உபமாமிருதிப்பெயாமேவுநூலும். (௨௮)

வசைஇன்றியபஞ்சஇராத்திரம்வாய்த்தவைகா
னசமும்இருமுச்சமயங்களின்நாமநூலும்
அசைவின்றியசோதிடவாகடம்ஆதிஆக
இசையும்பொதுநூல்களும்சார்வுறும்ஏனைநூலும். (௨௯)

பகரும்சொலவின்பரமார்த்தமும்பாரின்மீதே
திகழும்பலஆகியசைவசித்தாந்தநூலை
மிகவென்றிடுகண்டனமும்பின்விரிப்பதாக
தொகைமன்னியபார்வழக்கிற்குமுன்சொன்னஆறும். (௩௰)

செப்பத்தகுபார்வழக்கததினில்சிற்பநூல்கள்
முப்பத்திரண்டும்பிரமத்தலமூர்த்திஆக
வைப்புற்றவன்மால்எனச்சொன்னதும்வண்மைமாலுக்
கப்புச்செறிசெஞ்சடைச்சங்கரன்ஆதியானா. (௩௧)

துன்றும்பரிவாரகர்என்றும்துவாரபாலர்
என்றும்மதுசூதனைஈசருக்கீசன்என்றும்
மன்றம்துளவத்தவன்உத்தமன்மற்றுளோர்கள்
புன்றன்மையின்மத்திமர்என்றுபுகன்றஆறும். (௩௨)

அந்தண்கமலத்துறையும்சதுரானனத்தோன்
உந்தும்பரிவால்இருபாதம்உவந்துபோற்ற
வந்தம்புவிமங்கையைஏற்றவராகர்ஈசன்
அந்தண்கழல்தேடியதில்என்றறைந்தஆறும். (௩௩)

காவாலிதன்னைக்கனமோகினிஆய்மயக்கி
கோவாழிஅங்கைஅரிதன்உருக்கொண்டஆறும்
மாவாலகில்லியர்கள்வேதனில்வந்தவாபோல்
சேவாகனற்குமகசாத்தன்செனித்தஆறும். (௩௪)

மாலேபுருடோத்தமன்மற்றுளதேவர்மாதர்
போலேனைப்பல்பிரமாணம்புகன்றஆறும்
நூலேதிருமாமுனிவோர்கள்நுவன்றசாபத்
தாலேதிருமாற்கிடையூறடையாதஆறும். (௩௫)

விதிதாதையினோர்இருதாளினில்மேவுஞானத்
ததிமேதையன்ஆகியசீர்புனைஅம்பரீடன்
முதல்ஆகியபோதமக்கும்முனிவோர்கள்வாக்கில்
உதிர்சாபமோடவ்அபிசாரம்உருதஆறும். (௩௬)

மடமங்கைபாகன்மிருசாபவசத்தன்என்னும்
படியும்புகழ்விச்சுவசிட்டியர்பண்ணும்வேள்வி
இடைவந்துதக்கன்அவமானம்இசைப்பஇந்துச்
சடையன்தனதாம்கயிலைக்கிரிசார்ந்தஆறும். (௩௭)

மற்றந்தமேன்மைபுனைதக்கன்மகத்தைநண்ணி
எற்றங்குமேனிச்சதிதேவிஇறந்தஆறும்
அற்றநதகண்டன்அதனால்வெகுண்டந்தவேள்வி
முற்றும்சிதைத்துச்சுரனைக்கொலைமூண்டஆறும். (௩௮)

உடைந்தோடிவானோர்மலரோன்உலகத்தைஒல்லை
அடைந்தேபணிந்தங்கவர்இன்னல்அறைந்தஆறும்
தடந்தாமனையோன்சிவன்கோபம்தணித்தமர்க்கண்
மடிந்தார்கள்உய்யும்படிவேண்டியவாறுதானும். (௩௯)

அழித்திட்டவேள்விக்கயனோடரன்வந்துதக்கன்
பிழைக்கப்பணித்துக்குறைவேள்விபின்னும்தொடங்க
எழுத்தெட்டுடையபெருமான்அவண்எய்தலோடும்
வழுத்திச்சிவன்நான்முகனோடுவந்தித்தவாறும். (௪0)

மலரோனும்மாலும்மருவாஒருமாமகத்தை
இலைமேவுசூலப்படையான்அழித்திட்டதெல்லாம்
சலமோடுவேள்விதசகண்டன்தகர்த்ததற்கே
நிலமீதில்ஒக்கும்எனஓதியநீர்மைதானும். (௪௧)

பொன்னூர்பினாகச்சிலைவந்திபுகுந்தபோதும்
அன்னோர்இல்வாணன்அமர்தன்னிலும்ஆர்தவத்தின்
நன்னாரணமாமுனியோடமர்நண்ணுகாலும்
சொன்னீடுசூலப்படைச்சங்கரன்தோற்றஆறும். (௪௨)

இது அன்றிநக்கன்விருகாசுரற்கீவரத்தும்
அது அன்றியும்அந்தகன் அந்தகர் அன்றும் அன்றும்
மது துன்றுகொன்றை அரன்வேண்டஎம்மால் அளித்தே
கதுமென்றிடுக்கணினில்நின்றுகடந்த ஆறும். (௬௩)

கங்காளமஉற்றஅரனேடயன்காரிஆதி
அங்கானவறகம்அவெலாம்அடங்கூழிதன்னில்
தஙகாதுமாளமிகவும்தகிக்கின்றசறவ
சங்காரவத்து அரியேஎனுந்தன்மைதானும். (௬௪)

சோரரதன்மைஉளவச்சிரத்தானும்ஆடல்
பேராடகன்தன்மணிமார்பும்பிளந்ததேபோல்
கூராளயிற்றுச்சரபத்தையும்கூறுசெய்து
தாராபுயத்துநரசிஙகம்தழைத்தஆறும். (௬௫)

அவ்வாள் அரிபின் அமரர்க்கரனுக்கிரங்கி
வெவ்வாள் அவுணன்உதிரத்துவிளைந்தவெய்யோா
தெவ்வாருசத்திசமுகம்தமையும்செயித்தே
தவ்வாதுநின்றிப்புவிமீதுதயங்கும்ஆறும். (௬௬)

பண்ணாமொழி அம்பிகைமேவியபங்கினன்தன்
தண்ணார்சடையேதகைமேவுசமித்ததாக
நண்ணார்புரத்தைத்தழலுக்கினைநல்கவேண்டி
விண்ணேருடன் ஓர்மகவேளவிளைத்த ஆறும். (௬௭)

சேராமருவப்புரம்மூன்றுசெயித்தநாளில்
பாராகியதேர்பதியாமல்பரிப்பதற்கோா
ஏராமருப்புவிடை ஆகியும்ஏவதாயும்
ஆரார்சடைஈசனுக்கத்தரியாமிஆயும். (௬௮)

பொருள்ஒன்றியபாற்பசுஆகியும்புத்தன் ஆயும்
திருமன்னுமார்பன் அருள்செய்ததும்தேவர்வேண்ட
விரைதுன்றுகஞ்சத்தயன்தேரும்வியப்பொரேர்ந்தங்
கரிபஞ்சராமாஉபதேசம்அளித்தஆறும். (௬௯)

ஆழிக்கடல்வாய்தனில்வங்தெழும்ஆலகாலம்
ஊழிக்கனல்போல்வருநாளில்அவ்ஓங்குநஞ்சை
வாழிக்கருடக்கொடியானைமனத்துள்வைத்து
பூழித்திருமேனியன்முன்புபொசித்தஆறும். (௭௦)

பாலார்கடலில்துயில்வார்ஒருபாலன்வேண்டி
சேலார்அருவிக்கயிலைக்கிரிசேர்ந்தநாளில்
மேலாகியகேசவநாமவியாக்கியானம்
ஆலாலமிடற்றுமைபாகன்அறைந்தஆறும். (ருக)

பொருவார்பரசாயுதம்ஏந்தியபோர்இராமற்
கரனோடரன்மெய்ப்பிறிவாம்சமதங்கிமேல்நாள்
குருஆய்மிகுதந்தையும்ஆனதுகொண்டவர்க்கு
பரன்ஆயினதன்மையன்அல்எனும்பண்புதானும். (ருஉ)

திசைபற்றியபாரதப்பூசல்செயிப்பதற்கா
விசையற்குயர்பாசுபதாத்திரம்வேண்டிமாயன்
இசையச்சிவன்பால்இரந்தான்என்றிசைத்தசொற்கு
பசைஅற்றிடும்உத்தரம்ஓதியபண்புதானும். (ருங)

அரன்பால்அரிகண்அணிந்தாழிபெற்றான்எனும்சொல்
உரந்தான்அலஆழிபண்டேஉளதுற்றுபாசித்
திரந்தாழியில்பெற்றனென்சூலம்யான்என்றுமைக்கு
வரன்தான்இசைத்தான்எனஓதிடும்வாய்மைதானும். (ருச)

மதிதங்கியசெஞ்சடைநாதன்மகிழ்ந்துபோற்ற
கதிமன்னியமால்தரஞானநற்கண்ணும்யாரும்
துதிசெய்வரமும்திரிமூர்த்தியிற்சொல்லிஎண்ணும்
பதமும்மிகுஞானமும்நக்கன்படைத்தஆறும். (ருரு)

அன்றங்களித்தவரபாலனம்ஆக்கமாயன்
சென்றம்புவிக்குள்சிவபூசனைசெய்தஆறும்
மின்றங்குநேமிநெடுமால்அருள்மேவுகண்டா
கன்றன்தனக்குப்பிரமத்திகவ்வாதஆறும். (ருசு)

சங்கம்தரளம்தமைஉந்துதரங்கம்எங்கும்
பொங்கும்துறைதங்கியகங்கைபொருந்துகாசி
வெங்கண்நெடுமாசுணமீதுவிழித்துறங்கும்
செங்கண்நெடுமால்தலம்என்றுரைசெய்தஆறும். (ருஎ)

அந்தத்தலத்தில்அகலாப்பிரமத்திநீங்க
இந்தத்தலத்தைத்தமியேற்கருள்என்றிரந்த
கந்தர்ப்பவருக்குயர்காசியைக்காதலால்ஈய்ந்
தாந்திக்கமலன்பிரயாகையைஉற்றஆறும். (ருஅ)

மாதாரகம்ஆம்வரராமன்மந்திரத்தை
வேதாஅருளால்உபதேசம்விளைத்தபின்னா
சீதாகரம்ஆம்புனற்காசியில்சீவகோடிக்
காதாரமதாய்அரன்முத்தி அளிக்கும்ஆறும். (நிசு)

ஆசின்றியசொற்சிவபூசையும்அஞ்செழுத்தை
பேசும்திறமும்திருநீறணிபெற்றிதானும்
மாசின்றியஞானமும்காமமும்வாய்ப்பதல்லால்
ஏசின்றியமுத்தியின்ஏது அல்என்றஆறும். (சுய)

அக்காமியத்தினொடுஞானம்உண்டாதல்தானும்
மெய்க்காளகண்டற்கொருமூன்றுவிதங்கள்ஆக
புக்கோதுபூசையினில்சாத்திகபூசைசெய்த
தக்கோர்களுக்கேஎனுமஉத்தரம்தந்தஆறும. (சுக)

நிறைகின்றஞானநெறிஆகமநீதிகூர
செறிகின்றஅன்பினொடுபூசனைசெய்துளோர்க்கும்
நறைதுன்றுகொன்றைமதுமாலைநலம்கொள்வேணி
இறைவன்கொடுக்கும்பதம்அத்திரம்என்றஆறும். (சுஉ)

திரம்உஉற்றிலகும்புவிஆதிசிவாந்தம்ஆக
வருதத்துவம்முப்பதோடாறெனவைக்கும்ஆறும்
அரனுக்கருவோடுருமிச்சிரம்ஆகஒன்பான்
உருஉண்டெனல்வைதிகம்அன்றெனஓதும்ஆறும். (சுங)

வீறுகியசீர்உடல்தத்துவமமேயதொண்ணூற்
றுறேஅலவைதிகம்தன்னில்அனேகமென்ன
பேறுகியபிண்டஉற்பத்தியில்பேசுமஆறும்
தேறுதவரும்தெளிகைக்குறைசெய்தஆறும. (சுச)

நீங்காதநீலமணிகண்டனைநீதிகூர
பாங்கானபூசைபுரிகின்றவாபஞ்சசுத்திக்
காங்காகமதத்தின்அடைவேஎடுத்தஞ்செழுத்துக்
கோங்காரயுத்தம்உறஉச்சரித்தோதும்ஆறும. (சுரு)

அத்தன்மைஆம்அப்ரணவத்தினைஆரணத்தோ
டெத்தன்மைநாலும்அரியின்மயம்என்றஆறும்
உத்துங்கம்ஆனதிருஎட்டெழுத்தோடதொன்று
மெய்த்தன்மைஆனபுவிமீதுவிளங்கும்ஆறும். (சுசா)

மயம்மூந்துவேதம்உணர்மாயையின்வாதசங்கா
சியரும்பரிந்துதிருஎட்டெழுத்தோதுமாபோல்
அயல்ஒன்றும்ஓதாமையினுலேஅஞ்சக்கரங்கள்
இயல்கின்றசாமானியமந்திரம்என்றஆறும். (கூஎ)

திரம்உற்றஈசன்கிருமாலியம்தீண்டுகைக்கும்
அருகத்தஅல்லஎனும்வாய்மையும்ஆன்மலிங்க
தரணதைஆறுவிதமுத்திரைதம்மைமிக்க
பரதத்துவம்அல்எனும்வைதிகப்பண்புதானும. (கூஅ)

பொற்புற்றபுராணத்திலும்வேதப்பொருட்கொவ்வாமல்
நிற்புற்றுவீறுபுனைதாமதகீர்த்தோன்ற
சொற்பெற்றபாவங்களும்முத்தியைத்தூரம்ஆகக
கற்பித்தமாமோகனம்என்றுகழித்தஆறும். (கூகூ)

மேலோர்கள்கீழ்மையவராக்கடைமேன்மைஆக
பூலோகமீதுகலிகாலம்பொருந்தும்ஆறும்
ஆலாலநாகஅணையானிடத்தன்பிலாதார
ஏலோககீதிபுனைபாடண்டர்என்றஆறும. (எ0)

நிகழ்கின்றவேதநெறிசேர்தலின்நேமிமாலை
பகரும்புராணம்உயர்சாத்திகபாகம்என்றும்
திகழ்சங்கொடாழிதிருமண்குறிதீட்டல்வேதம்
புகழ்கின்றமுத்தர்இயல்பென்னப்புகன்றஆறும். (எக)

பார்த்தற்குயர்சாரதியார்பொற்பதம்விளக்கும்
தீர்த்தப்பிரசாதம்நுகர்ந்திடும்செய்கைஎல்லாம்
ஏத்தற்கரிதாகியமுத்தியின்ஏதுஎன்று
வாய்த்திட்டசெழும்பிரமாணம்வழங்கும்ஆறும். (எஉ)

சதுமாமறையால்இசைவாகியசாததிரத்தால்
விதம்ஆகியபல்பிரமாணம்விளங்கஓதி
மதுவார்கமலம்திருஉந்திமலாந்தமாயன்
பதமேபரமபதம்என்றுபகர்ந்தஆறும். (எங)

தருமார்த்தகாமமொடுமுத்திஅச்சார்ங்கபாணி
திரமாக்கொடுப்பன்எனும்ஆறும்அத்தேவதேவன்
அருளால்பொருந்தும்அதுஅன்றிஅகண்டமுத்திக்
கொருமாற்கமும்இல்அயல்என்னஉரைத்தஆறும். (எச)

இயல்நக்கனைவந்தனைபாத்திரன்என்றுபண்பால்
உயர்மெய்ப்புவியிற்சிலர்எண்ணிஉரைப்பதெல்லாம்
பயபுத்தியினும்அவன்காமியபாகம்எல்லாம்
தயைஉற்றருள்தன்மையினும்எனச்சாற்றும்ஆறும். (எரு)

பரம்ஆகியதேஅவனேஎனும்பத்தியாலும்
அரிதாகியமுத்தியைஎய்திடும்ஆசையாலும்
கருதாதரவால்பணிவந்தனைகைக்கொளும்சீர்
வரபாத்திரன்மால்எனஓதியவாறுதானும். (எசு)

பாலத்துவிழிச்சிவனைப்பகவான்எனும்பேர்
கோலச்சசிசூரியாதங்களைக்கூறுமாபோல்
ஓலக்கடல்சூழ்புவியோர்உபசாரம்ஆக
சீலத்துடன்ஓதுவாஎன்றுரைசெய்தஆறும் (எஎ)

குளிர்பொற்றுளவத்தரிஆறுகுணங்களாலும்
அளவற்றவன்என்றருமாமறைஆனஎல்லாம்
வெளிஇட்டுரைசெய்தலினால்அவ்விளங்குமாலே
தெளியப்பகவான்எனநிச்சயம்செய்தஆறும், (எஅ)

நாராயணோபநிடம்மைவிழிநாரிபங்கன்
ஆராதனைசொல்லியதென்றதின்கருத்தை
ஓராதுசத்தசலத்திற்பொருள்ஓதலால்ஓர்
சாராககூறிஉளதென்றிடும்தன்மைதானும். (எகூ)

மெய்ந்நான்மறையைத்தொகைசெய்துவிளம்புகின்ற
அந்நாரணோபநிடம்தன்னில்அனேகம்ஆக
நன்னாரணனைப்பரன்என்றுநவின்றுநாட்டி
அன்னானதுபாசனைசொல்லிஅமைத்தஆறும். (அ௰)

சீராகியஇம்மறைசொன்னதிரம்தனைப்போல்
ஏரார்பலநூற்பிரமாணத்தியற்கையாலும்
நாராயணனுக்கிமவான்மடநாரிபாகன்
ஆராதகன்என்பதுசொல்லிஅமைத்தஆறும் (அக)

மெய்ம்பார்கரமும்மதவெங்கரிமூலம்என்ன
கம்பார்கமலக்கரமாயவன்காத்தமேல்நாள்
அம்போருகன்ஐம்முகன்ஆதியர்அத்தலம்போந்
தெம்பேர்அலஇங்கிவைஎன்னஇருந்தஆறும். (அஉ)

அரன்தான்உபாசித்தமைஅன்றியும்அன்றுமைக்கும்
வரமாமிருகண்டுவின்மாமகனுக்கும்வாய்மை
திரம்ஆகியமாலின்உபாசனைசெப்பிசெய்வித்
துரம்ஆகியநீடுலகத்தில்உவந்தஆறும். (அங)

மாலாரதுபாசனைசிறகஅம்மாலின்மாற்பத்
தேலார்குழலாள்தன்உபாசனையேஇயற்றி
பாலார்உமையாள்பதியேமுதல்பற்பலோரும்
நாலாவிதம்ஆகியதம்பதம்நண்ணும்ஆறும். (அச)

கள்ளார்மலர்மேலுறைவோனொடுகண்ணுதற்கு
நள்ளாவருதோற்றமொடுக்கமுமநாரணன்பால்
உள்ளாகும்அன்றிஅவன்அன்னவைஒன்றும்ஒன்றுன்
எள்ளாதுசிறப்பன்றிலேஆயஎனஎன்றஆறும். (அரு)

அரியில்துயிலும்பெருமான்அவதாரம்எல்லாம்
தருமத்தைஆக்கமிகுதுட்டர்கள்தம்மைநீக்க
கருதிற்சுருதித்தொகைதங்களைக்காக்கஎன்றே
பருதிப்பொருளில்தெளிவாகப்பகர்ந்தஆறும். (அசு)

உதயக்கதிர்மண்டலத்துள்ஒளிஆகிஎல்லார்
இதயதினையும்முயல்விப்பவன்என்றும்வேணி
மதிவைத்திடும்சங்கரன்என்னவகுத்தல்தானும்
முதுசொற்சலமேஎனும்மாற்றம்மொழிந்தஆறும். (அஎ)

அனைவோர்அகத்தின்உறைவானும்அருக்கன்வட்டம்
தனில்வாழ்பவனும்இருகஞ்சத்தடங்கண்உள்ளான்
எனமாமறையும்பலநூலும்இயம்பலால்அக்
கனகாம்பரமால்எனநிச்சயம்கண்டஆறும். (அஅ)

அரனைச்சுரர்வேள்வியின்அப்புரமஆக்கலாலும்
வரைவுற்றவனுக்கவிமிச்சில்வழங்கலாலும்
கருதிற்பசுவின்பதிஆம்பெயர்கண்ணுதற்கு
பரிவுற்றிமையோர்வரமாசயப்பவித்தாலும். (அகூ)

மதிஒன்றியசெஞ்சடைவானவன்வாய்த்தவேள்விப்
பதிஅல்அவனும்பலதேவரும்பாருளோரும்
எதிர்இன்றியவேள்விகள்தம்மில்எசிக்கநின்றுன்
பதுமம்திகழ்உந்தியனேஎனும்பான்மைதானும். (கூய)

ஏர்க்கும்படிகூறியபின்பிருவோர்கள்ஆம்இவ்
வாராக்குங்குமமென்முலைமங்கையர்வாய்மைஆக
பார்க்கும்பொருளாப்பரவத்துவைப்பாரின்மீதே
ஆர்க்கும்தெரியும்படிபேசுவதாயினேன்ஆல். (கக)

ங - வது. விடயத்திறப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம். [௱சு]

அரிதாசர் திருவடிகளேசரணம்.



## ச - வது, புராணவிவேகப்படலம்.

அரிசங்கரர்அந்தரஅந்தரம்ஆய்ந்திந்நூலில்
தெரிகின்றதனால்பயன்ஏதெனில்சிற்பரத்தின்
சொருபம்தெரியாதவாமுத்திதொடர்ந்திடார்என்
றுரைதந்திடும்நான்மறைஆதலின்ஓதல்உற்றேன். (க)

வளம்ஒன்றியஅப்பரவத்துவைவாய்மையாலே
அளவின்றிடுதற்கெளிதோஎனில்ஆடகச்சீர
நளினம்திகழ்வாணெடுமாமறைநாலுகாண
எளிதன்றதனால்உலகத்தவர்யாவர்காண்பார். (உ)

அரிதென்னினும்அப்பரவத்துவுக்கந்தவேத
புருடன்பிரமாமுதலோர்செழும்பொற்பிதென்றும்
சொருபம்இதுநாமமும்ஈதெனச்சொன்னசொன்ன
உரையின்படியேதமியேனும்உரைப்பதானேன் (ங)

அன்னான்முகனேமுதலோருடன்ஆரணங்கள்
இன்னான்உலகில்பரதேவதைஎன்பதெல்லாம்
சொன்னால்முதலேஅதுநிற்கஅச்சொற்கள்தம்மை
பின்னேன்மொழியப்பணிஎன்பதுபேசவேண்டில். (ச)

அகல்வேதநூலைமனமாச்சரம்அற்றுணர்ந்தோர்
மிகுசிற்பரத்தைவெளிகாண்பர்அவ்வேதநன்னூல்
சகலாதிகாரம்அலஆதலில்தண்தமிழ்ப்பாத்
தொகையால்உலகர்க்கிதமாஇதுசொல்லல்உற்றேன். (ரு)

மைவாரிகுழலெழில்கொண்டுயர்மாநிலத்தில்
மெய்வாய்மைஆனமறைநாலின்விரிந்தசெஞ்சொல்
தவ்வாதஇந்தப்பெருநூல்சகலாதிகாரம்
எவ்வாறுபெற்றதெனும்தன்மைஇயம்பவேண்டில். (சு)

அல்லார்மிடற்றன் உடன் அச்சுதன் தன்னை எத்தும்
சொல்லான இந்தத்தொகைநூல்மிகும்தொல்லைநூல்கள்
எல்லாம்உணர்ந்தபெரியோர்செவிக்கேற்கும்ஒன்றும்
கல்லாதவர்க்கும்பொருள்செய்யக்கருத்ததாமா. (எ)

மென்கன்றுமென்றுதழைகோதியவீறுபோல
புன்கல்விகொண்டுபெரியோரைப்பொருள்செயாமல்
வன்கண்மைபேசும்மனமாச்சரமாக்கள் அந்த
நன்கஞ்சம்மேவும்அயன்வாய்மையும்நம்பலார்ஆல். (அ)

நற்பாரில்மூடர்சிலபேர்நயவார்களேனும்
பொற்பாயினஇப்பனுவற்கொருபுன்மைஆகா
கற்பூரராசிவிலைதன்னைக்கடைக்குள்உப்பு
விற்பான்ஒருத்தன் அறியான் அதின்வீறுபோமோ. (கூ)

மாகத்தொடுபாரைவிழுங்குமகாந்தகாரம்
போகக்கதிரோன்உதயம்செயும்பொங்குதோற்றம்
சாகைத்தருவின்பெரும்பொந்துதனில்பதுங்கும்
கூகைக்கிதம்அன்றதனால்ஒருகுற்றம்உண்டோ. (ய)

உலகத்தியற்கைஇது ஆதலில்ஓடைநெற்றி
மலைசெற்றதேவனெடுநாரணன்வண்மைஎல்லாம்
பலபட்டநூலில்பிரமாணம்பகர்ந்துகாட்டி
நிலைநிற்கும்ஆறுபுவிமீதுநிகழ்த்துவேன் ஆல் (யக)

வன்பாய்ச்சல்பாயப்பதுங்கும்வரிவேங்கைபொங்கி
மென்பாய்ச்சல் அன்றி அறியாதுவெள்ளாடடக்கம்
நன்பாக்கள்வல்லோர்நவின்றுர் அதுநானிலத்து
புன்பாக்கருதும்தமியேன்புகலாதொழிந்தேன். (யஉ)

ச-வது. புராணவிவேகப்படலம்முற்றும். ஆ திருவிருத்தம். [ாயஅ]

அரிதாசர் திருவடிகளே சரணம்.

---

## ரு-வது, நகரப்படலம்.

மருவார்துளவத்தொடைமால்ஒருமச்சம்ஆகி
பெருவாரிதியில்புகுசோமுகன்பேரைமாள்வித்
துருவாகியமாமறையைக்கமலோதயற்கு
திருவாய்மலர்ந்தான்ஒருசீதளச்செய்யகுன்றில். (க)

விரியும்தடங்குன்றதுநாள்முதல்மின்னுவேத
கிரிஎன்றுதன்பேர்கிளக்கின்றதுகீழ்நிவந்த
புரியும்சுரமும்புனல்ஆறும்அப்புண்ணியப்பேர்
தெரியும்படியேநிகழ்கின்றஇத்தேசம்என்றும். (உ)

தோயம்புகுந்தம்புவியைச்சுடர்ஆழிமாயன்
சாயம்புவுக்குப்பரிந்தீந்ததுவும்சாலநெஞ்சில்
நேயம்பொருந்துமுதற்பூசையைநீதிவேதம்
ஆயும்புலவோர்செயநின்றதும்அந்தவூரில். (௩)

அம்மாநகர்நீடரிவாசபுரப்பெரும்பேர்
இம்மாநிலத்தில்இலகித்தழைத்தேடுலாவும்
செம்மாமலராள்திகழ்வைபவம்சேர்ந்துதிங்கள்
மும்மாரிபொழிந்திடநற்செகம்மூன்றும்ஏத்த. (௪)

பொன்னின்மடம்எங்கணும்வேதபுராணம்ஆர்ப்ப
மின்னும்மணிஆலயம்யாவும்விழாஅலம்ப
மன்னும்மனைஆனவைமங்கலவாணிபம்ப
துன்னும்தெருவில்படங்கள்துவைத்துலாவ. (௫)

வளப்பார்புகழும்படிவாழும்இம்மாநகர்க்கண்
பிளப்பாஒருதூணினில்வந்துபிறந்துளானுக்
குளப்பாவனைகூர்அரிதாதன்என்றேதும்நாமக்
களப்பாளன்தானைத்தளங்கள்கரைகண்டநாளில். (௬)

௫ - வது, நகரப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம். [௱உ௪]

அ ரி தா ச ர் தி ரு வ டி க ளே ச ர ண ம்.

## ௬ - வது, நதிப்படலம்.

சிகரக்கனகக்கிரிசூழ்ந்திடுசெய்யபானு
மகரநதினைநண்ணியபுண்ணியமாதம்மேவ
பகரற்கருஅந்நகர்மைந்தரும்பாவைமாரும்
முகரக்கடல்போல்நதிஆடமுயன்றுசென்றார். (க)

செல்லும்திரளில்திருஆழியும்சங்கும்மென்தோள்
புல்லும்குறியும்திருநாமமும்பொற்புலாவும்
வல்லன்னகொங்கைவனமாலையும்ஆகவாயில்
பல்லிலன்றுமுல்லைநிரைகொண்டொருபாவைசென்றாள். (உ)

வில்லார் நுதலில் திரிபுண்டரவெள்ளைநீறும்
அல்லார் குழல்மேல் அணிகொன்றையும்அக்குமாலை
புல்லாவளர்பொன்முலையும்பொலிவாகஇன்பச்
சொல்லார் அமுதன்னவள்மற்றும்ஓர்தோகைபோனாள். (௩)

இம்மான் அனையார் இருவோர்களும்மேவியான்முன்
அம்மால் அரனைப்புகழகின்றவர் ஆகநாட்டும்
செம்மாதளைநேரநகைஆரணச்செல்வமாதும்
மைம்மாமுகில்நேர்குழல் ஆகமவல்லிஆகும். (௪)

காதைப்படியும்கடைப்பார்வைகொள்காமவேதம்
ஓதப்படிவம்உயிர் மேவிஉலாயஎன்ன
சீதப்படிகத்தொளிர ஆரணிதீர்த்தம்ஆட
வேதப்படிவாய் அணைந்தார் இவர்மின்கள்போல. (௫)

சு - வது, நதிப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம். [௱உ௬]
அரிதாசர்திருவடிகளேசரணம்.

## எ - வது, தோத்திரப்படலம்.

வேறு

அனையவர்நான்முகன் அவ்வழிவேள்விசெய்தவபிருதம்படிவான்
புனிதமகாநதிசகலமும்இவ்வழிபோதுகஎன்றருளா
தனதுகைமேவியஅரணிகொடேமிகுதனைமிசைகீறுதலால்
கனமலிஆரணிஆனநதிப்புனல்கண்டுமகிழ்ந்தனரே. (௧)

களிமையிலேலகிகர் அனையவர் ஆரணிகண்டுகளித்தளவே
இளமதிநேர் நுதல்ஆகமவல்லிஎனும்பெயருக்கிசைவாள்
குளிர்புனலின் துறையையடைந்தொளிர்கொன்றையும்அம்புலியும்
வளர்சடைவானவர்தம்பெருமானைமகிழ்ந்துதுதித்திடுவாள். (௨)

ஆலமரத்தை அடக்கியவித்தென அண்டம்எலாம்எளிதில்
சாலஅடக்கிஅளிப்பவனேதிகழ்சந்திரசேகரனே
மாலயனுக்கும்அனந்தமறைக்கும்நல்வானவருக்கும்எலாம்
மூலம்எனத்தகுகாரணனேநமமுக்கணனேநமவே. (௩)

மெய்ப்புனலில்குளிரும்கிளர்வன்னியில்வெம்மையும்மென்மலர்சேர்
ஒப்பறுநன்மணமும்மணியில்திகழ்ஒள்ஒளியும்எனல்ஆய்
செப்புசராசரம்எங்கும்நிறைந்ததிகம்பரனே அடையார்
முப்புரம்வேகநகைத்தவனேநமமுக்கணனேநமவே. (௪)

அச்சகளத்தயன் ஆய் அகிலங்கள் அளித்தி அவ் அவத்தனையும்
பசுரூ அச்சுதன் ஆம் உருவம்கொடுபாலனை செய்குதியின்
நிசசயம் ஆகியநின்வடிவால்வெறுநீறுபடுத்துதிநீள்
முச்சிகைஆயுதனே சிவனேநமமுக்கணனேநமவே. (ரு)

ஆதிபரப்பிரமத்தொளிஆய் அதில் ஆகியமூஉருஆய்
வேதவிழுப்பொருள் ஆய் அனல்கால்புனல்விண்புவிஆம்விதம்ஆய
ஓதுசராசரம்ஆய்உடல் ஆய்உயிர் ஆகியும்யோகியரால்
மூதுணரப்படும்அற்புதனேநமமுக்கணனேநமவே. (சா)

எண்டிசையும்புயம்அங்கிதிவாகரன் இந்துவிலோசனம்நீ
டண்டகடாமுகடேமுடிபன்னகர்ஆலயமேஅடியா
கொண்டபெருந்திருமேனியனேஒளிர்கொண்டல்நிறத்தவனும்
முண்டகனும்தெளிதற்கரியாய்நமமுக்கணனேநமவே. (எ)

என்றுதுதித்தசிவாகமவல்லிஎழிற்புனல்ஆடியபின்
சென்றுநதிக்கரைஏறலும்அன்புளசேடியர்வந்தணுகா
மின்றிகழபட்டணிவிததுமணம்கமிழ்மேனிபுலாத்திநிறம்
துன்றியபல்பணிபெய்துமகிழ்ந்துதுதிக்கஇருத்தலுமே. (அ)

அன்னவளுககெதிரே இருதாளில்அலம்புசிலம்புடையாள்
மன்னும்மணிப்பணிமேகலைஆரணவல்லிஎனும்பெயராள்
நன்னதிபுக்குமகிழ்ந்தளிபம்புநறுத்தொடைசேர்அளகச்
சென்னிமுகிழத்தகரத்தினள்அன்பொடுசீதரனைப்புகழ்வாள். (கூ)

நாரணனேநமநீஉதவும்பதினாலுவகைப்புவன
பாரணனேநமசங்கரனைத்தருபங்கயனைப்பெறுநாள்
ஆரணனேநமஅற்புதனேநமஅண்டம்எலாம்உதவும்
பூரணனேநமநீஅருள்வாய்மிகுபுத்தியும்முத்தியுமே. (ய)

பண்ணமர்வேதமும்எட்டரிதாகியபாவனநின்உருவத்
தெண்ணும்உரோமஒழுக்கில்அரும்பிஇலக்கம்இலாதனஆய்
நண்ணியஅண்டசமூகவளர்ச்சியும்நாசமும்நின்வயின்ஆம்
புண்ணியலீலையனேஅரியேபரிபூரணனேநமவே. (கக)

அத்தியின்இன்கனிஉள்உறைசில்உயிர்அத்தருநேர்அறியும்
சத்திஇலாஅதுபோல்உனதாகியதத்துவம்உன்னிடைஉற்
பத்தியஅண்டம்எல்லாம்உறைசங்கரர்பல்பிரமாதிகளால்
புத்திசெயற்கரியாய்அரியேபரிபூரணனேநமவே. (கஉ)

பால்விரவும்புனல்போல்முடிவுன்னொடுபயில்புவனங்களிலே
நால்விதவேதனும்முக்கணனும்தனிநாயகர்என்றிதயம்
மால்விளையச்செய்துநின் அருளால்வரும்மற்றவரோடொருவன்
போல்விளையாடுபரம்பரனேபரிபூரணனேநமவே. (கங)

அந்தமும்ஆதியும்ஆகியபேர்ஒளிஆம்உனைமாமறையால்
முந்துணர்வோர்சிலர்அல்லதுமாறுகொள்மோகனநூல்வழிநீ
தந்தபெருஞ்சமயங்களையேபரதத்துவம்என்றுணர
புந்திமயக்கிடும்அச்சுதனேபரிபூரணனேநமவே. (கச)

இன்னனஆகியநாரணநாமம்இயம்பிவழுத்தியபின்
தன்னுளம்ஒத்துநிறைந்துதெளிந்ததடம்புனலிற்படியா
பொன்னிடகீரதிகன்னிஎனத்தகுபூரணஆரணிஆம்
அன்னதியின்கரைஏறினள்மெல்லெனஆரணவல்லியுமே. (கரு)

பொறபுளபட்டணிவித்தொளிர்மேனிபுலர்த்தியசேடியர்தாம்
நற்படிமக்கலம்உத்திடஆறிருநாமமும்இட்டமுகார்
பற்பலபூண்வனமாலைஅணிந்துபசுந்துளவம்புனையும்
தற்பரனேஎனஅன்பொடுகண்டஒர்தவிசில்இருக்கலுமே. (கசு)

எ-வது, தோத்திரப்படலம்முற்றும். ஆகதிருவிருத்தம். (ாசரு)
அரிதாசா திருவடிகளேசரணம்.



## அ - வது, கடாவிடைப்படலம்.

ஆரணவல்லியைஆகமவல்லிஅரும்பியகொங்கைநல்லாய்
நாரணனைப்பரதத்துவன்என்னவும்நண்அகிலங்கள்தரும்
காரணன்என்னவும்ஈசனையும்தருகாவலன்என்னவும்நீள்
பூரணன்என்னவும்என்எதிர்சொல்லினைபுதுமைஇவ்என்றலுமே. (க)

ஓவியம்ஒப்பவள்அவ்வுரைதன்னைஉகந்துநகைத்தனள்ஆய்
பூவைநிலப்படியேசிவனைச்சிலபொய்ம்மைமொழிந்தனைநீ
தேவாதுதிக்கும்முகுந்தன்மிகும்புகழ்செப்புதல்ஆயிரஆம்
நாவுளவற்கும்அரீததுஇன்றுநமக்கெளிதோஎனவே. (உ)

பூவைஇனிப்பலசொல்லுமதென்னபுராந்தகனுக்கெழில்மால்
நேரொனஆரணவல்லிநிகழ்த்தினையில்எவர்க்கும்முகம்
சேரிமையிற்குறைகண்களில்வந்துதெரிந்திடுமோதெளிநின்
பேர்அறிவுக்கும்வரற்கவரற்கபிறங்குதல்என்றலுமே. (ங)

சீரிதறிந்திலை ஆகமவல்லிசிவன்பரம்என்றனைமா
மேருவின்நேர் அறியாதவர்மற்றொருவெற்பைவியப்பதுபோல்
ஓரொருபூமியில்ஓர்ஓர்உகங்களில்ஓர்ஒருநூல்விரிவாம்
பேரறிவாளர் அலாதவருக்கதுபெருமையதாம்எனலும். (௪)

இப்படிநீசிலசொல்லுமவென்ன இரண்டுபெருஞ்சமயத்
தொப்பறுநூல்களும்மண்மிசைஇந்தஉகத்தும்வழங்கிலவோ
அப்பெருநூல்களில்அச்சமயங்களில்ஆகியதெய்விகமும்
செப்பிடவேபெருமைச்சிறுமைச்செயல்தெரிதரும்என்றலுமே. (௫)

வேறு

திங்கள்நேர் திருமுகத்துச்சிவாகமவல்லிகேள் என்
றஙகயல் அனையசெங்கண் ஆரணவல்லிசொல்வாள்
உங்கள் தம்சமயநூலை ஒன்றுநூறுகமுன்னோ
சஙகமுத்தமிழால்செய்தார் தழைத்த அப்பனுவல்எங்கும். (௬)

தீதறும்இந்தநாடுதிராவிடம்ஆகையாலே
வாதனைஉங்கள் நூல்மேல்வளர்ந்ததுமாயோன்கேழ்மை
பூதனேமுதலோர் ஆழ்வார்புகன்றவைசிலஉண்டந்நூல்
வேதநூல்உணர்ந்தோர்க்கல்லால்விரித்திடும்பொருள்விளங்கா. (௭)

ஆதலால்மாயோன்மேன்மை அறிவதற்கரியதென்ன
காதுலாவிழியாள்சைவாகமப்பெயர்கலாபமஞ்ஞை
தாதுலாம்தொடை இராமசரிதைபாரதங்கள்தென்னூல்
தீதிலாப்பா அன்றோமால்திறம்தெரியாதோஎன்றாள். (௮)

ஆயதுசொல்லக்கேட்ட ஆரணவல்லிஎங்கள்
மாயவன் அனந்தலீலைமகிமையால் ஆயஇந்த
பாயிரபுராணம்தன்னைபைந்தமிழ்செய்தார்செய்த
தாயிரததொன்றும்இல்லைஅதிலும்நீ அறிந்ததற்பம். (௯)

என்றலும்பொறாதாள் ஆகிஎழிற்சிவாகமத்துவல்லி
தென்றமிழ்த்தொடையால்மாலைசெப்பியதற்பம்ஆகில்
நின்றனப்பனுவலாலேநிரம்பஓதியதேஎன்ன
நன்றிதுகேட்டிஎன்றுநான்மறைவல்லிசொல்வாள். (௰)

ஈரிருமறைகள் ஆனஇருக்கெசுச்சாமாதற்வம்
பேரியல்தயித்திரீயம்பிரகதாரணியம்லிங்கம்
சாரிரம்நாரசிங்கம்சதபதப்பிராமணம்சொல்
காருடம்கெற்பம்சாந்தோக்கியம்கடவல்லிமுண்டம். (௧௧)

முற்கலோபநிடம்மேலோர்மொழிந்திடும்பிரமவிந்து
சொற்குலாம்தாபனீயம்சுவாபனோபநிடம்ஞான
வற்கமோடியாச்சவற்கம்மயித்திராவருணம்மன்னும்
சிறகுணலயம்தான்மந்திரவுபநிடம்மானதீபம். (கஉ)

இளர்மகோபநிடம்காலாக்கினியுருத்திரம்சாபாலம்
துளவநாரணம்சுவேதாச்சுவதரம்சுபாலம்சொல்லால்
அளவிலாப்பாரமாற்பம்அதருவச்சிரம்என்றெண்ணி
தளமலரவன்சொல்வேதாந்தங்கள்முப்பத்திரண்டுமே. (கங)

ஆசறுசீர்வாசிட்டம்ஆரிதம்வியாதநன்னூல்
காசிபம்பரத்துவாசம்கணபராசரியம்என்ன
பேசியசாத்திகத்தின்பெரும்பிரமாணம்தன்னை
சாசுதம்ஆகக்காட்டும்தருமசாத்திரங்கள்ஆறும். (கச)

ஆனதாக்கியம்கீள்காத்தியாயனம்ஆத்திரேயம்
மானவம்யாச்சவற்கம்வைட்டிணவம்தான்என்றும்
மோனமாதவர்களாலேமொழிவதற்குரித்தாய்ப்பாரில்
ஏனையோர்புகழும்ஓர்ஆறிராசததருமநூலும். (கரு)

வாருகற்பத்தியம்சாம்வர்த்தம்ஔசனசம்சாத்தம்
நேரறுகோதமம்யாமிகம்எனநிகழ்த்தும்தன்மைப்
பேரினஆய்மெஞ்ஞானப்பெருந்தவமுனிவர்பேச
தாரணிவிரும்பும்ஆறுதாமததருமநூலும். (கசா)

கந்தம்ஆக்கினேயம்சைவம்கமடம்மச்சியம்இலிங்கம்
தங்தபோநிகழும்தொல்லைந்தாமதபுராணம்ஆறும்
வந்தபாகவதம்பற்பம்வராகம்வைணவத்தினோடு
சிந்தைகூர்கருடம்நாரதீயம்சாத்திகங்கள் ஆறும். (கஎ)

பேசுசீர்ப்பிரமாண்டம்சொல்பிரமகைவர்த்தம்பேர்போம்
மாசிலாமாற்கண்டேயம்வாமனம்பிராமம்மண்மேல்
வீசியகல்விச்செல்வம்பிருதபவுடைகம்என்றென்
றேசறுமுனிவோர்செய்தஇராசதபுராணம்ஆறும். (கஅ)

பாற்கவம்சோமம்சாம்பம்பரவுசீர்வருணம்ஆர்க்கும்
ஏற்குமானவம்நற்காந்தம்இலங்குவாயவியம்செஞ்சொல்
தீற்கம்ஆய்நிகழுகின்றசெழுந்துருவாசம்தேங்கும்
நாற்கடற்புவிக்குஞானநயனம்ஆம்நாரசிங்கம். (ககூ)

நன்பராசரம்மாரீசம்நாரதம்காபிலம்சொல்
இன்பஆதித்தியம்கௌசிகபுராணம்வாசிட்டம்
முன்பதாம்பிரமாண்டம்சீர்மொழிசிவதருமம்என்ன
ஒன்பதோடொன்பதானஉபபுராணங்கள்தாமும். (உ௰)

அங்கிராவியாதனார்கற்பாலனார்ஆபத்தம்பர்
தங்குசீர்வருணனார்போதாயனமுனிசாபாலர்
துங்கஆரீதர்தாக்கர்சுமந்தமனார்சுபோதர்
பொங்குலோகாக்கியார்வெம்புலிப்பெயார்ப்புனிதரென்பார். (உக)

பிரம்சிம்பவர்பன்னிதிபெறும்சமதங்கியார்நீள்
இருநிலம்புகழ்ந்திடும்காரிடினியாசினன்படீனன்
சரென்றபெயரைஉள்ளார்சாண்டில்முனிவர்வாக்கால்
விரவிசாஒன்பதாகிவீறுபமிருதிதானும். (உஉ)

பரத்துவாசன்வாசிட்டன்பராசரன்சவுனகன்சீர்த்
திரத்துநாரணன்அகிர்ப்புத்தினிமுனிநாற்பத்தெண்ணு
பிரத்துள்எண்ணியகும்பத்தான்இரணியகெற்பன்என்பார்
உணாத்துமாநிலத்துநாட்டஓங்குசங்கிதைகள்தாமும். (உ௩)

பரவியபற்பம்பற்போற்பவமொடுவைபவம்புட்
கரம்மிகுநாரதீயம்காட்சிசேர்சனற்குமாரம்
வரநளகூபரம்சீர்வாசிட்டம்சனகம்மாஜந்
திரம்மிகுசத்துவாக்கியம்திலகம்நற்புவனமோகம். (உச)

துன்னியபரமம்மாயேச்சுரம்செயம்பரமநீதி
மன்னுசாத்துவிதஞானம்வாய்த்தபவுரிடம்எனப்பேர்
பன்னுசங்கிதைநூற்றெட்டாம்பஞ்சராத்திரமும்அன்பால்
நீன்னிலம்மதித்தவைகானசம்எனும்நாமநூலும். (உரு)

சீரணிகமலத்தண்ணல்திருஅருள்பெறுவான்மீகர்
ஏரமர்வாக்கால்ஓதும்இராகவகாதைஎன்றும்
பார்தகாதைஆனபஞ்சமவேதம்என்றும்
தாரணிமுழுதும்போற்றத்தகும்இதிகாசம்தாமும். (உ௬)

போதிடங்கொண்டஉந்திப்புராதனன்பூவைபங்கன்
ஆதரம்கூரமுன்னாள்ஆடியபரதநன்னூல்
மாதிடம்ஆனபாரோர்மதித்தவாகடநூல்நீடும்
சோதிடம்முதலஆகச்சொல்லியநூல்கள்தாமும். (உஎ)

காண்டகுவையாசிகம்காபிலம்கவுதமீயம்
நீண்டசைமினியம்பாணினீயம்நன்கீதிஔத
மூண்டகாணுதம்என்ஞமுனிவரால்மொழியப்பட்ட
மாண்டருதெரிசனத்தின்வருக்கம்ஓர்மூன்றும்மூன்றும். (உஅ)

யாதவம்மாயாவாதம்இரணியகெற்பம்பாரில்
வாதியர்க்கிடங்கொடாராமானுசமதம்நால்வேத
சாதனப்பார்க்கரம்சொல்தத்துவவாதம்என்ன
மேதையோர்ஆவோர்சொன்னமிருமதம்அஞ்சும்ஒன்றும் (உகூ)

பஞ்சராத்திரம்கீள்சைவம்பவுத்தம்ஆருகதம்பாரில்
விஞ்சுசொற்சாருவாகும்மிருபசுபதம்ஆம்பேரா
நெஞ்சுவந்துவரிகூழமநெடுசிலமாந்தாதந்தம்
தஞ்சம்என்றனுசரிக்கும்சமயம்நாலுடன்இரண்டும். (௩0)

மற்றுளசமயநூலும்வரம்பறஇரும்பைக்காந்தம்
பற்றியதென்னநெஞ்சில்பணிந்திடப்பணிவேறின்றி
கற்றுமெய்ப்பொருள்ஆராய்ந்துகருத்தில்மாச்சரியம்தீரச்
செற்றவர்க்கன்றேதோன்றும்சீதரன்மகிமைஎல்லாம். (௩க)

என்னஆகமமடந்தைஎயிற்றரும்பிலங்கநக்கு
சொன்னஇந்நூல்கள்எல்லாம்துளவமால்மகிமையன்றி
பின்னுசெஞ்சடையினன்தன்பெருமைபேசாதோஎன்ன
மின்னிகாவேதவல்லிமீளவும்விளம்பல்உற்றாள். (௩உ)

இப்பெருநூல்கள்எல்லாம்ஈசன்மால்பெருமைதோன்ற
செப்புகையாலேஅன்றேசிறுமையும்பெருமைதாமும்
கைப்பதிவானநெல்லிக்கனிஎனக்கண்டதென்றாள்
அப்பொருள்சிந்தைசெய்யாதாகமவல்லிசொல்வாள். (௩௩)

அழகிதேசொன்னாய்மின்னேஆரணவல்லியேஇப்
பழமறைநாலும்மூன்றுபத்துடன்புராணம்ஆறும்
வழுவில்வேதாந்தம்என்றுவகுத்தமுப்பத்திரண்டும்
தழையும்நால்ஒன்பதானதருமசாத்திரங்கள்தாமும். (௩ச)

தோமில்சங்கிதைகள்ஆதிசொன்னஇந்நூலும்அன்றி
காமிகம்யோகசம்சொல்காரணம்அசிதம்தீத்தம
தீமைதீர்சூக்குமம்பிம்பம்சிந்தியம்விசயம்வீரம்
மாமைசேர்கிரணம்சித்தம்வாதுளமகுப்பிரபேதம். (௩ரு)

தஞ்சம்ஆம்சந்திரஞானம்சகத்திரமகுடம்பாரில்
விஞ்சுசந்தானம்பாரமேச்சுரம்விமலஞான
புஞ்சநிச்சுவாசம்சாயம்புவம்புரோற்கிதம்நீடும்
அஞ்சுமான்சர்வஉக்தமனலம்லளிதம்ஔரவம். (௩௬)

என்னுமஇவ்ஆகமங்கள்இருபதும்எட்டும்பாரில்
துன்னியவீரமாயேச்சுரம்பரமாத்தம்ஆகி
மன்னியசிவசாயுச்சமந்திரகோப்பியம்சீர்
தன்னிகர்இல்லாஅட்டோத்தரச்சதஉருத்திரியம். (௩௭)

அரிகரபாடணமபேருனதத்துவசாரம்சொல்
பரமமாரகசியம்சிரப்பவுடிகம்சைவதன்மோத்
தரமசிவதருமம்பேதசைவசித்தாந்தஞான
வரசொருபப்பிரவேசம்வச்சிரசூசிமற்றும். (௩௮)

ஏனையபிரமாணங்கள்ஊண்இலஎமக்கும்உண்டு
மீனிகர்தடங்கண்நல்லாய்வேதசாத்திரபுராணத்
தானஉத்தரம்நீசொன்னால்அதற்கும்உத்தரித்துவெல்வேன்
நான்உனக்கிடையேன்என்னநான்மறைவல்லிசொல்வாள். (௩௯)

ஓதிமம்அனையாய்நீஇங்குரைத்தஆகமங்கள்எல்லாம்
வேதசாத்திரபுராணவிருத்தம்ஆற்றிருக்கில்அன்றோ
நீதிசேர்தத்துவத்தைநிருபணம்செய்யல்ஆம்என்
றாதரவுடனேமீண்டும்அருமறைவல்லிசொல்வாள். (௪௰)

விரைமலர்க்குழல்மானேநீவெகுவிதம்ஆகக்கூறும்
பெரியஆகமங்கள்போலப்பிறைஅணிசடையினானை
பரம்எனவேதம்தானும்பகரும்என்றிருத்திபோலும்
உரியஅச்சுருதிஎல்லாம்உரைத்திடும்பரமார்த்தம்கேள். (௪௧)

மன்னுசாமந்தர்நாலுவகைப்படைத்தலைவர்மேல்சீழ்
உன்னும்மந்திரிகள்என்பார்ஓர்ஒருத்தனையேபார்த்து
பன்னுசொற்புவியைஆளும்பட்டபத்திராச்சொல்லி
அன்னவர்க்கிறைவன்என்றோர்அரசனைப்புகழ்வார்போல. (௪௨)

ஈசன்அக்கினிபதங்கன்இந்திராதியரைவேதம்
ஆசறத்துதிக்கும்காலத்தவர்அவர்அதிகர்போலப்
பேசும்அவ்வேதம்தன்னைப்பின்புமுன்போக்கிப்பார்க்கில்
ஏசிலாஇவருக்கெல்லாம்இறைவன்காரணனேஎன்னும். (௪௩)

வேதமெய்ப்பொருள்கொள்வார்க்குவியாதசூத்திரமாற்கத்தால்
ஏதொருபொருட்குமுன்பின் இசைந்ததென்றுணர்தல்வேண்டும்
ஓதுசாத்திரபுராணத்துறுபொருள்கொள்ளுவார்க்கு
பேதம்அற்றவ்வேதத்தைப்பின்செலப்பெறுதல்வேண்டும். (சச)

அப்படிஅன்றிமுக்கணன்பெயர்ஆரணத்தில்
வைப்புறஇருந்ததென்றேவலுவுடன்வழக்கும்வாதும்
செப்புதல்திறமையாகாச்சிறந்தசாத்திரபுராணம்
ஒப்பவேதத்துக்கேற்கஉரைப்பதுத்தரமதாகும். (சரு)

சாத்திரம்வேதம்என்பதரணிமேல்மாந்தாக்கெல்லாம்
நேத்திரம்இரண்டும்ஆகும்திகழ்த்தியஇரண்டில்ஒன்று
மாத்திரம்இலாதார்காணார்மற்றதூஉம்இலர்ஏதுக்கும்
பாத்திரர்அல்லர்அந்தர்என்றிவைபலவும்சொன்னாள். (சசா)

அ - வது, கடாவிடைப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம். [ாகூக]

அரிதாசர்திருவடிகளேசரணம்.

## கூ - வது, அந்தணர்சந்நிதிப்படலம்.



ஈதுரைசெய்யக்கேட்டஎழிற்சிவாகமமடந்தை
ஓதியஉலகுக்கெல்லாம்ஒருவன்என்றுரைக்கும்நாதன்
ஆதிரையானேஆகஅன்றிஓணத்தன்ஆக
வேதசாத்திரபுராணவிளக்கினால்காண்டும்என்றாள். (க)

மெல்லியல்இனையசொல்லவேதமாமடந்தைபார்மேல்
எல்லைஇல்கல்விஉள்ளாள்இவளுடன்யாவதொன்றும்
சொல்லவும்தகுமேசொன்னால்சொன்னஉத்தரத்தைஒப்ப
வல்லளும்ஆகும்என்றுமனமகிழ்ந்தினிதிருந்தாள். (உ)

வேறு

நேரிழைமாணர்இன்னனசொல்லாநிகழ்காலத்
தாரணிஆறுமுடித்தமதானஅனுட்டானம்
சீரியஆகச்செய்துமுடித்துத்திகழ்வேதம்
பாரில்அனேகம்மெய்யொடுலாவும்படிஎன்ன. (ங)

நெற்றிப்புண்டரர்பொற்புளநன்மேனியர்சென்னி
சுற்றிப்போர்த்துதரித்தவர்காவித்துகிலாளர்
பற்றைச்செற்றவர்மென்கலைபின்தோல்பயில்யோகத்
தொற்றைத்தண்டினர்முத்தண்டினர்அங்கொருசாரார். (ச)

கவித்தநிழற்குடையார்குண்டிகையார்கழையார்நீள்
பவித்திரம்ஆனதருப்பைசமித்துபயில்கையார்
தவத்தொழில்அல்லதுமற்றொருதன்மைச்சரிதத்தால்
உவத்தல்இலாநெஞ்சந்தணர்மற்றங்கொருசாரார். (ரு)

வாகுவில்வெள்வளைஆழிதரிப்பார்வனமாலைக்
கோகனகத்தவர்பன்னிருநாமக்குறிஉள்ளார்
மேகநிறத்திருமால்கழல்அல்லால்வியவாதார்
யோகியர்ஞானப்பாகவதப்பேர்ஒருசாரார். (சு)

பூதியின்நீள்முப்புண்டரர்மார்பில்புரிநூலார்
சோதியதாகச்சூழசடையார்நற்சுவல்தோலார்
வேதபுராணத்தாகமநூலின்விரிவெல்லாம்
ஓதியமேதைப்பாசுபதத்தார்ஒருசாரார். (எ)

ஆதாரத்தெய்வத்திருமால்பொன்அடிதாழ
போதாநிற்பார்வேதபுராணப்பொருள்கேளா
வேதாராமத்தெய்துதலும்தேன்மிகுவேரித்
தாதார்ஓதித்தையலர்நின்றஞ்சலிசெய்தார். (அ)

அஞ்சலிசெய்தவருக்கருள்செய்தங்களைவோரும்
பஞ்சியல்மெல்லடியீர்இருவீர்என்பகர்கின்றீர்
எஞ்சல்இல்வேதபுராணவழக்கென்இவண்என்ன
கொஞ்சுகிளிப்போல்இன்சொல்உரைப்பார்கொடிஅன்னார். (கூ)

எல்லைஇல்ஞானச்செல்வம்உளீர்யாம்இருவோம்எம்
புல்லறிவால்அச்சங்கரர்மாலைப்புகழ்கின்றேம்
வல்லிகொள்சோலைக்கண்சிறுபோதுவசித்துப்பின்
நல்லதுதீதென்றும்மில்மகிழ்ந்துநடப்பீர்ஆல். (ய)

என்றுபணிந்தளவில்தவவேதியர்எல்லோரும்
மின்றிகழ்பூண்முலையார்நினைவுக்குவியப்பெய்தா
நன்றிரும்என்றவரோடும்இருந்தனர்நல்வாசம்
குன்றுதல்இன்றிவிளங்கியவேதக்குளிர்காவில். (யக)

கூ-வது, அந்தணர்சந்நிதிப்படலம் முற்றும். ஆக திருவிருத்தம். [உ௱உ]

பாயிரகாண்டம்-கறு படலம்-கூறு கூடிய திருவிருத்தம். உ௱உ.

அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

சர்வம்விஷ்ணுமயம்ஜகத்.

# உ-வது, பூர்வகாண்டம்.

## க-வது, உலகவழக்கப்படலம்.

முதலாவது,

## அறுவத்துமூவர்பரிச்சேதம்.

ஆரணையாகமமாமடந்தையப்போ
தாரணவல்லியைநோக்கியணங்கேயெங்கள்
ஏர்மருவுசிவசமயமகிமைநூலால்
எடுத்திசைவித்திடவேண்டியிருக்குமோயிப்
பாரறியகலியுகதிட்டாந்தமாகப்
பரமனடிபோற்றியறுபத்துமூவர்
சீரியவாகியபதங்கள்பெற்றவாறும்
தெய்விகமும்போதாவோதெளிவார்க்கென்றாள் (க)

அவ்வுரையாரணவல்லியமையக்கேளா
ஆகமவல்லியைநோக்கியாலகால
மைவளர்கண்டத்தானுக்கிவையோகொண்டோர்
மகிமைவிரித்துரைக்கின்றாய்வழிபட்டோர்க்கு
எவ்வகையில்தேவர்களும்பதமும்பேறும்
ஈவதற்குசக்தியில்லாதிருக்கின்றாரோ
தெய்விகமும்அவரவர்தம்சமயந்தோறும்
திட்டாந்தமாயுலகிற்சிறவாதுண்டோ. (உ)

இங்கிவைகள்நிற்கயரிசமயத்தாழ்வார்
ஈனைவருடனெழுநூற்றெழுபதின்மர்
பொங்கியசீர்தத்துவவாதியர்களெல்லாம்
பூதலத்தில்முத்தியினைப்பொருந்தப்பெற்றார்
மங்கைநல்லாய்சங்கரனேமுதலாம்தேவர்
மகிழ்ந்துதவும்பதங்களுக்கும்மணிகூராழி
அங்கைநெடுமாலுதவும்பதந்தனக்கும்
ஆயும்கால்அந்தராந்தரமுமுண்டே. (ங)

மேலவைசொல்வேனிங்கேசொலில்பரப்பாம்
வெங்காளவிடமுண்டான்வெண்ணெயுண்டான்
சீலமிகுமகிமைதனையுரைக்கும்நாமம்
திகழ்வேதநூலொடுசாத்திரங்களென்னும்

## உலகவழக்கப்படலம்.

பாலிருக்கநீருந்தும்படியேபோலப்
 பார்வழக்கைப்பாராட்டிப்பகர்வதானல்
ஏலுமுணருடையார்கள்மனத்துக்கெல்லாம்
 இசைந்திடுமோஎன்னவிரித்தினிதுசொன்னாள். (சு)

## உ-வது, சிற்பசாத்திரப் பரிச்சேதம்.

ஆயிழைபாகமவல்லியதுநன்றென்று
 ஆரணவல்லியைநோக்கியங்கைதன்னில்
மேயபொருள்காண்பதற்கேன்மிருகண்ணாடி
 விடையவனேபுள்ளவனேவிளங்கழூநர்
கோயில்தொறும்பிரமத்தானத்துவாழ்வார்
 குளிர்சடையோன்கோயில்குடதிசையிலுங்கள்
மாயவனேபரிவாரதெய்வமானன்
 மற்றிதனல்தெரியாதோமகிமையென்றாள். (எ)

அன்னதுகேட்டாகமமெல்லியலுக்கந்த
 ஆரணமெல்லியலுமைம்பாளானல்கீஅத்
தொன்னெறியாம்வித்தாரச்சிற்பநூலின்
 துணிபொருளோர்ந்திலேபோலும்துலங்கும்அன்னூல்
மின்னியவிச்சுவதருமம்விச்சுவேசம்
 விச்சுவசாரம்விருத்தம்மிருதாவட்டம்
மன்னுநளமயமனுமான்வித்துப்பானு
 மானகற்பாரியஞ்சிருட்டமானசாரம். (அ)

வத்துவித்தியாபதிபாராசரீயம்
 மாரிடகஞ்சயித்தக்கம்வரத்துப்போதம்
வித்தாரமயிந்திரமால்வச்சிரஞ்சௌமம்
 விச்சுவகாசிபமகதந்திரம்விசாலம்
சித்திரங்காபிலங்காலயூபம்பாரிற்
 திகழ்நாமசங்கிதைசாத்திகஞ்சீராக
வைத்துளவிச்சுவபோதமாதிசாரம்
 மதிப்பானவெகுச்சுருதமானபோதம். (கூ)

இத்தகையவாகியசிற்பங்கள்முப்பத்
 திரண்டுளயன்னவைவிசியமித்தியாதோரூர்க்கு
மத்திமமாம்பிரமதானத்துச்செங்கண்
 மாயவனைப்பதிட்டித்துமற்றுளோனை

உத்தமமாம்திக்குத்தேவதைகளாக
ஊர்ப்புறத்துப்பதிட்டைசெயவுமாக்கும்நீங்கள்
பத்திசெயும்சிவாலயமத்திமமட்டேகாண்
பாவனமாகியலிங்கப்பதிட்டைசொல்லும். (௪)

இதவரிமுரல்துளவத்தொடைசூழ்மால்மா
கெற்பகிரகத்தியற்கைகிளத்தநீகேள்
பீதகவாடையர்பஞ்சபேரந்தன்னில்
பிரமத்தானத்திருக்கப்பெறுபோதுங்கள்
காதுகமாம்பேரமதில்செய்தபூசை
கருத்தாவாம்விம்பத்தைக்கலந்துபல்கும்
ஆதலினல்தத்தமதாலயத்துமன்றி
அணிநகர்க்குநடுவுறைவாரதிகரன்றே. (௫)

ஏரணியும்சிவாகமமாமடந்தைகேளாய்
இவ்வளவோவின்னமின்னமியம்பக்கேளித்
தாரணியெண்பிராமியமாம்சிற்பநூலில்
சயனமுடனசனந்தானங்களென்ன
நாரணனுருவெர்ருமூன்றதிலொன்றென்று
நன்னலுபேதமவைநன்னலுக்கும்
சீரணியும்திருநாமம்யோகம்போகம்
சிருட்டிசங்காரங்களெனச்சிறக்குமாதோ. (௬)

சாத்திகராசததாமதத்தால்திட்டித்
தல்காத்தல்சங்கரித்தல்தொழிலாமிந்தக்
கீர்த்திபுனைதிருமாற்குப்பதிட்டைத்தானம்
கிளர்த்திடத்துமவர்கெற்பக்கிரகந்தன்னை
ஏத்தரியபாகங்களேழெட்டெட்டெட்
டெண்பத்தொன்றீரொட்டுக்கீரொட்டாகச்
சூத்திரமிட்டொருநாலுவிதங்களாகச்
சொல்லியிடுமாலயங்கள்தோறும்தோறும். (௭)

நாலுவகையாதனமாம்மூலபேர
நாரணனைப்பிரமத்தானத்துச்செம்பொற்
கோலமலராளவனிக்கோதையோடும்
கூடிவிளங்கும்பதிட்டைகூறுகிற்கும்

ஏலுமவர்சயனத்தானங்களான
இருநாலுமூர்த்திக்குமியல்பால்மிக்க
சீலமிகும்கவுத்துவங்கள்தனக்குமந்தத்
திசைமுகத்தான்பிரதிட்டைசெப்புமாதோ. (அ)

ஈதுபிரமத்தானத்தியற்கைமின்னே
எழிற்பரிவாரத்தியற்கையினிக்கேளுங்கள்
மாதுறைபாகன்சிற்பவாக்கினுல்தாம்
மால்கோயில்மருவுபரிவாரமென்றும்
காதலுறுமிந்திரனும்நாமுஞ்சேயும்
கணபதியும்துவாரங்கள்காப்போமென்றும்
ஓதியதுபோல்சிவனாலயத்திலேநாம்
உயர்திசைத்தேவதையெனமாலுரைத்ததுண்டோ. (கூ)

அன்னதலாற்பிராமியத்திலிரண்டுமூன்றும்
ஆகியவத்தியாயத்தானத்தினோடு
மன்னியதாரகமானதிருமாலுக்கு
மதிவளரும்சடையானைமலருளானைக்
கின்னரரைக்கிம்புருடர்தம்மைமற்றைக்
கெருடரைக்கந்தற்பரைக்கேசரரையேனைப்
பன்னகரைத்தும்புருநாரதரையெல்லாம்
பரிவாரகணமாகப்பகருமன்றோ. (ய)

சக்கரக்கைநெடுமாலையல்லாத்தேவர்
சகலரும்தம்மாலயங்கள்தன்னிலன்றி
மிக்கபெருஞ்செல்வம்விளைவிக்கமாட்டார்
வேதாந்தப்பொருளானவிண்டுமூர்த்தி
எக்கடவுளாலயத்துளிருக்குமேனும்
இனியபெருஞ்செல்வம்விளைவித்திடுமென்றோதும்
தக்கபராசரசிற்பமதனுல்மின்னே
தாரணியிலார்செல்வம்தனைவேண்டாதார். (யக)

பார்வையொருபாகத்தானுடனேஸிங்கோற்
பவமூர்த்திசெயவீரபத்திரதேவன்
மேவியதெக்கணமூர்த்தியென்னுமிந்த
மேன்மைபுனைவிக்கிரகவிதத்தையெல்லாம்

காவிவிழியாகமமாமடந்தைநல்லாய்
கண்ணனுக்குப்பரிவாரகணமென்றோதும்
தாவுபஞ்சராத்ரசமயச்சிற்பமத்தை
சாத்திரமன்றென்றினிநாம்தள்ளலாமோ. (௰௨)

ஆரணவாகியமானசயினன்புத்தன்
ஆலயத்துக்கிலக்கணமும்மறைதலால்சங
கிரண நூலேசிற்பமானபோதும்
கேசவனையேமகிமைகிளத்தாநிற்கும்
தாரணியில்மற்றுமுளவிசேடநூல்கள
சங்காழிகதைவடிவாள்சார்ங்கமேந்தும
நாரணனார்கோயிலுக்குப்பரிவாரங்கள்
நாலுவிதந்தானுகநவிலுமன்றே. (௰௩)

தன்னையரனைப்பிரமன்றனைமற்றோரைச்
சாத்துவிதராசததாமதச்சங்கீர்ணர்
என்னவகுத்தவதாரத்தெய்வம்பததும்
இதிற்கூத்தபரிவாரமென்கையாலே
அன்னவனாயாலயங்களெங்குஞ்சூழ
அருச்சிப்பார்அரன்பிரமனாதியாகப்
பன்னியமத்திமமதமமாம்பரிவாரத்தைப்
பலஇடத்துமேவிரும்பிப்பதிட்டைசெய்யார். (௰௪)

வைப்புளசாத்திகத்தெய்வம்தன்னையுந்தா
மதகுணராசதகுணமாம்தெய்வமாகச்
செப்பிடினும்பெறுப்பேருபெற்றோமென்று
சிவசமயத்தோர்மாலைத்திருமேனிக்கொண்
டிப்புவியில்பதிட்டிப்பாரெம்மனோரும்
இதிற்பழுதேதுக்கெனவோரிடங்கள்தம்மில்
அப்பெரியமகிமையுளசிற்பநூலை
அம்புவியில்பிரமாணமாக்கவேண்டி. (௰௫)

பணியணியுஞ்சங்கரனைத்திருமால்கோயிற்
பரிவாரதேவதையாய்ப்பதிட்டித்தற்கு
மணிநகையாய்திட்டாந்தம்வேண்டினம்பி
மருவுதிருக்குறுங்குடியாமகத்தானத்தும்
திணிநெடுவேய்நிகர்தோட்பங்கயத்துச்
செல்விசிந்தைபிரியாதவொருதேவன்வாழும்

அணிதிகழ்வெள்ளறைதனினுமாதியான
அரிவாசபுரத்திலும்பார்த்தறியலாமே. (௰௬)

நாகரந்திராவிடமவேசரஞ்சொல்சாதி
நான்மறையோனரபாலன்வணிகனண்ணும்
மாருணஞ்சாத்திகரசத்தாமதங்கடையவம்
மணிவண்ணனயன்கிருததிவாசனென்ன
ஊருளவாலயத்தாமவிமானமூன்றை
உத்தமமத்திமமதமமுறையாகின்ற
தாகவினுலவரவாதங்குணமுஞ்சாதி
அடைவுமதிலேதெளியவறியலாமே. (௰௭)

இமையவனாவிநதியத்தினிடைசாத்தீகம்
எழிறபுருடலிங்கமதற்கிறைவன்மாயோன்
நமருணம்விந்தியத்துக்குங்கிட்ணவேணி
தனக்குநடுசசிவன்றெய்வஞ்சண்டலிஙகம்
குமரிநதிகிட்ணையினடுப்பெண்பூமி
கோமலரோனிராசதமாஙகுணமிப்பார்க்கு
விமலவிமானப்பெயாநாகரமுந்துங்க
வேசரமுமிகுத்ததிராவிடமுமாமே. (௰௮)

சாதியுமந்தணர்வணிகர்திருபனொன்னச
சாற்றியிடுமிகுபராசரியசிற்பம்
ஈதுமலாற்பிராமியததிற்செஙகண்மாலே
எல்லார்க்குமீசனிவனென்றும்வேறு
நாதனிலானென்றுதிச்சுலோகந்தன்னில்
நாட்டியுரைத்திடுமூன்றுநயனத்தோடு
மாதவனேச்சங்கராசயனநதன்னில்
மகப்பதிட்டைசொல்லுமிதுமற்றுங்கேளாய். (௰௯)

மானுபகரணத்திற்காலபேதம்
வகுததுரைக்குமவ்விடத்துமலருளானே
டானேறுமீசனேயும்படைததேவன்
அரவணையானென்பதடையாளமாக
மீனேயதடங்கணுகமத்துமானே
விளங்கியகேசவனுமவியாக்கியானம்
தானேதிவைத்தவயாசிற்பத்தாலும்
சஙகரறகுநாரணனார்தலைவனென்றுள். (௨௰)

- வது, உலகவழக்கப்படலம் முற்றும். ஆ திருவிருத்தம் ௨௪.

அரிதாசாதிருவடிகளேசரணம்.

## உ-வது, வராகாவதாரப்படலம்.

### க - வது, திருவாழிமலையென்கிற திருவண்ணுமலைப் பரிச்சேதம்.

வேறு.

இன்னசொற்சுருதிமெல்லியலிசைத்திடநகைத்திவளுரைப்பாள்
சொன்னசிறப்புத்துநூனிற்கழும்மதகரித்தோலுடுததான்
சென்னியைத்திருமுகன்றேடிஞனிருபதநதேடுகைக்கே
மின்னெயிற்றொருதனிப்பன்றியாய்நின்றனன்விண்டுவென்றாள். (க)

என்றலுஞ்சுருதிமானவிலுவாள்வைதிகத்தியல்புராணத்
தொன்றிலும்பணியிலாவசனமேயுரைசெய்தாலுருதியுண்டோ
துன்றுபல்பணிபொருந்திருதனத்தாகமத்தோகையேநான்
ஒன்றுநின்மனமுடன்படவிளம்புவனதின்றுறுதிகொள்வாய. (உ)

பாங்ளந்தருளுநாரணன்றனினுட்பட்டவன்றோ
மேருவுங்கயிலையுஞ்சிவனுமம்புதிகளும்வேறுமெல்லாம்
ஆரணம்புகழுவவ்வாழியானகிலமுண்டருளுமங்நாள்
நாரிபாகனுமவன்றிருவயிறறன்றியேநுழைவினனே. (ந)

சரிவளைக்கையினுயீதுநிற்கவுமெசுச்சாகைதன்னில்
கருதுமாதிப்பருச்சத்தின்மேவுமனுவாகங்கண்முன்றிற
பரவுசெஞ்சொல்லினும்பாரமாத்துமமுதறபலவிடத்தும
விரவுமாலேனமானதுநிலந்தாஙகவென்றேவிளம்புமம. (ச)

ஏழுமாலேனமாய்நின்றதிந்நிலைமையேயென்றியமபும்
நாமவேதத்துடன்மாறுபாடாகவேநவில்வவெல்லாம
தாமதம்புனையுநூலந்தநூலியல்புமேற்சாற்றுகின்றேன்
தேமிகுங்குழலினுயென்னநீடாகமத்தெரிவைசொல்வாள். (ரு)

---

### உ-வது, மோகினிவேடமென்கிற நாச்சியார் திருக்கோலப்பரிசசேதம.

ஆதிநாராயணனீடுவாராகமானதனையிவ்வா
றோதுபார்தாங்குகைக்கவதரித்தானெனவுத்தரித்தாய்
தீதிலாவந்தமாதிங்கள்சூடிக்குநற்றேவியாகிக்
காதலாமுன்புபின்சென்றதற்கேதுநீகட்டுரைப்பாய். (க)

பையுடைப்பாறலைப்பன்னகத்தரசனிற்பள்ளிகொளளும்
மையெழிற்கொண்டமால்மிக்கமோகினியெனும்வடிவதாய்முன்
கையிலக்கினிமழுக்கன்றுமானுடுகபாலந்தரிக்கும்
ஐயனுக்கலகிலாவையனைப்பெற்றதற்கையமுண்டோ. (உ)

நேரிழாயிதலானீடுகூருமமெனுங்கிழ்புராணத்
தேருலாவத்தியாயங்கடான்முப்பதோடெட்டினூடே
நாரணன்வனிதையாய்நக்கனோர்புருடனாய்நலமதாகும்
தாருகாவனமதிற்சஞ்சரித்தாரெனுந்தன்மைபொய்யோ. (௩)

என்னவாகமமடப்பாவைசொல்லலுநகைத்திரதமேவும்
கன்னனேராமொழிச்சுருதிமாமங்கையுங்கட்டுரைப்பாள்
அன்னமேஇங்குநீசொன்னசெஞ்சொற்களுக்கடைவதாகப்
பன்னியொன்றொன்றதாயுத்தரந்தெளிவுறப்பகருவென்கேள். (௪)

கொன்றையுஞ்செஞ்சடைச்சங்கரன்றுங்கவைகுந்தமேவித்
துன்றுபைநாண்டுழாய்மாயனைககண்டதோர்தொல்லைநாளில்
இன்றுபோலன்றுமுளளாய்சுராக்கமுதளித்திடுவதற்காய்
நின்றநின்பெண்ணுருக்காணவிச்சித்ததென்னெஞ்சமென்றான். (௫)

நெற்றிசோவிழியினனிதுபகர்ந்திடுதலுநேமிமாலும்
கறறைவார்சடையினையநீயுமவ்வடிவினைக்கண்டபோழ்தே
பற்றுசிந்தைய்னுமாய்மாயையாகியவலைப்படுதியென்றான்
கொறறமூவிலைநெடும்படையினன்மீளவுங்கூறலுற்றான். (௬)

அழைக்குமானைக்குமன்றஞ்சலென்றுதவுகூராழியாய்நீ
இழைக்குமாயைக்குநானுளனலேனெனநகைத்தெம்பிரானும்
மழைக்குலஞ்சாரவதோரசந்தனச்சோலையும்வாவியும்பொன்
தழைக்குமின்னூரசலுஞ்செய்ததிற்றுனுமோர்தையலானான். (௭)

கன்னியைப்பொன்னினூசலினைதிர்ந்தளவிலேகௌரியுந்தன்
சென்னியிறகஙகையும்நகுவரென்றதனையோர்சிறிதுமெண்ணான்
மன்னுநற்பரிமளப்புதுமலர்க்கணுகுசீர்வண்டுபோலம்
மின்னுருக்கொண்டமோகினிதனந்தழுவமேல்விழுவதானான். (௮)

மானெனத்தகையகண்வல்லிபொன்னூசன்மேன்மருவினனம்
மேனியைத்தொடுமெனுங்லனிழிந்தோடவவ்விடையினனும
கானலைப்புனலெனத்தொடருவாரபோனெடுங்கானுமாறும்
தானிளைப்புறநடந்தோடிவெள்ளருவிகடாளினூர. (௯)

கிட்டவந்தளவிலேதன்னுருக்கொண்டுமால்கிளரநின்றான்
திட்டமிங்கதிகமாயைக்குளானேமெனச்சிந்தைசெய்யாக்
கட்டுசெஞ்சடையனுநாணினனென்றுபாகவதமங்கோ
தட்டிக்கந்தநன்குரைசெயுங்காரணத்தடவிதன்றோ. (௰)

நூல்வழிப்பலபுராணத்துமிவ்வளவையேநுவலுநேயத
தால்வழுத்தினைவாழ்விக்குமையானைத்தமரர்கோமான்
கால்வழிக்சோருமிந்திரியவுறபத்தியின்காரணத்தால்
சேல்விழிக்கோதையேவந்துளானீமுனஞ்செப்புமைந்தன். (௯௧)

மதியெனத்தெளிவுபெறறுளிருநல்வதனமண்டலமடந்தாய
புதல்வருறபத்தியென்றுரைசெய்யும்பொருள்களிப்புவனமீதே
கதுவுமெய்க்கலவியைக்கருதியின்பங்கொளுங்கணவாமாணா
மிதுனசத்தியினலால்விளையுமோவென்றுநீவினவிறயேல. (௯௨)

தன்னையொப்பறுதிலோத்தமையைநலவேதியனறந்தநாளம
மின்னெழிறகண்டுதனவசமலாதிந்தியமவீழவெளகிக
கொன்னகத்தாலதைத்தறுபதிறறுயிரங்கூறுசெய்தான
பின்னரத்துளிகளால்வாலகில்லியரொனுமபோபிறந்தாா. (௯௩)

தெருடருஞசிந்தையாயிந்தமடடோவகத்தியன்வசிட்டன்
புருடன்விந்துவினிடத்தல்லவோவந்ததிபபொருளகளெல்லாப
அருடருமபாரதந்தனிலுணடாகையாலவைகளபோலம
மிருடன்விந்துவுமவிளைந்திடடதேபோலுமேதினியினமீதே. (௯௪)

உ - வது, வராகவவதாரப்படல முற்றும். ஆ திருவிருத்தம்-சாங.

அரிதாசாதிருவடிகளேசரணம.

## ௩ - வது, பலமுனிவா சாபபபடம்.

### க - வது, தாருகாவனசாபபபரிச்சேதம

மங்கையேயிவையெலாநிறகநீளதாருகாவனமதிறபோயச
சங்கரன்புருடனுந்தையறண்டுளவமாறுனுமாகி
இங்கிதமபெறமகிழந்துலவிறுொன்றுமொனறிங்குறைத்தாய
அங்குவந்தவாகளசெயதுளளகாரணமெலாமறைகுவெனகேள. (க)

மருவுமத்தாருகாவனமுனிததலைவாதமமனவிரததிப்
பெருமையெவவளவெனககாணவேசெங்கண்மால்பெண்ணதானுன்
விரவுமஙகவாகளபத்தினியர்கறபினைவிவேகிப்பதறகே
பொருமுனைப்பரசுபாணியுமனுைகரமிகுமபுருடனுனன். (௨)

கருதுமிங்கிவாகண்மோகனசொரூபகங்களைக்கணடபோழதே
திரமிகுத்திடுமுனிததலைவரோடவாகளபததினியரொல்லாம
உருகுசிந்தையாகளாயமதனவேளகணைகளபடடுருவலோடும
விரதவிடடைகண்மறந்தனாகடங்கறபுமவெவவேறுபடடாா. ௦(௩)

தங்கள்பத்தினியர்கற்பழியமாதவர்பொறாதவர்களாய்மற்
றிங்குவந்தினையமோகம்விளைத்தவனிலிங்கந்துணிந்தே
பங்கமுற்றிடவெனச்சாபமிட்டனர்களப்பரவுசாபம்
பொங்கியப்புருடனிற்சம்பவித்ததுகணப்பொழுதுதன்னில். (௪)
மற்றதன்பின்னர்மாமுனிவர்போய்வாசமாமலரயன்பால்
உற்றவெல்லாமுரைத்தனருரைத்திடலுமாலுந்தியானும்
குற்றமில்லாமுனித்தலைவரோயப்பெருங்கொடியமாயைப்
பற்றிலொன்றியமனத்தீர்களாயின்னல்படவீர்கள்போலும். (௫)
மோகனப்புருடனுயங்குவந்தவன்மூளைப்பிறைமுடித்தான்
தோகையைப்பொருவுசாயற்பெண்ணுய்வந்தவத்துவையுரைக்கில்
நாகநித்திரைபிறனுந்தியாலுலகுபன்னலுபூத்தான்
மேகமொத்தொளிருவானன்பருக்கீறிலாவீடளிப்பான். (௬)
உலககாரணனுமாயோங்குபல்லுயிர்களுக்குயிருமாவான்
இலகுபாதங்களகண்வதனமென்பவைகளாயிரமதானன்
அலகிலாநாரணப்பெயரினனென்றுபண்பாலுணாத்தான்
புலமைகூாமாதவத்தலைவருந்தெளியவப்போதறிந்தார். (௭)
மருவருங்குழலினுய்முனிவர்வாழ்தாருகாவனமதிற்போய்
இருவருஞ்செய்தசெய்தவைகளக்கிரமமேயென்றபோதும்
திருவிரும்பியபுயச்செங்கண்மால்பரனெனத்தெளிவுபெற்றார்
விரைமலர்ச்சடையினன்சாபமிங்கெய்தினன்விளைவிதன்றே. (௮)
இந்தவாறிங்குநானிசையவோதியவெலாமிலகுவண்டார்
கந்தநாண்மலர்மணங்கமழுமையோதியாகமமடந்தாய்
முந்தநீசொன்னகூாமத்தினின்முப்பதோடெட்டெனுஞ்சீர்
அந்தநீடத்தியாயத்திலேதெளியுமாறறியலாமே. (௯)
அரவணைப்புருடனேபுருடன்மற்றகிலமேலிதரெல்லாம்
தெரிவையாக்குவமையென்றுரைசெயும்பதுமமாந்திகழ்புராணம்
மருவுமிப்பொருள்வராகத்துமஞ்சானமாமறையினூடும்
விரகுறத்தெரியலாமென்னவவ்வாகமமின்னுரைப்பான். (௰)



௨-வது, தன்வினைதன்னைச்சூழ்ந்தபிருகுசாபப்பரிச்சேதம்.

சிட்டரொண்மாயனேபுருடனென்னுந்திறஞ்செப்புவார்போற்
பட்டவாணுதலுமாபதிதனைச்சாபசம்பந்தனென்றாய்
விட்டுவீசியசுடர்த்திகிரிமால்பிருகுவாம்விமலன்முன்னாள்
இட்டசாபத்தினலல்லவோவவதரித்திடுவவெல்லாம். (௧)

வீங்கற்புதமேருவைநிகர்க்கும்விருத்திரன்மெய்விழும்பொழுது
தாங்கப்புவியிலொருகூறுமாகாணேதரிக்கின்றேன். (ரு)
வெல்வாயவனைவினாந்தென்றான்வெண்கோட்டயிராபதத்தானும்
நல்வாரிதியிற்றுயின்மேவுநாராயணனைவிடைகொடுபோய்ப்
புல்வாய்கண்டவரிவேங்கைப்புலிபோலிருகண்பொறிசிதற
வல்வாய்வயிரப்படைதன்னால்வதைத்தான்மாண்டான்வல்லவுணன். சு
அன்னபடியேபோன்மன்றலளிசேரோதியாரணங்கே
பொன்னின்வரையேசிலையாகப்புரமூன்றெரியப்பொருதாற்கு
மன்னுநெடுமால்வெகுவிதமாம்வடிவாய்நின்றங்கருள்செய்தான்
உன்னுமூலகிலிவைதமையுத்தரவான்மீகமுரைத்திடுமால். (எ)

௰உ - வது, உருத்திரனுனபாத்திரத்தில் பெருமாள் காளகூடவிஷபாரணப் பரிச்சேதம்.

(வேறு.)

என்னவாரணவிளங்கொடியிவையெலாமிசைப்பப்
புன்னைவார்குழலாகமவல்லியும்புகல்வாள்
அன்னமேயரியத்தனைசத்திமாறனால்
மன்னுபாற்கடன்மந்தரத்தாற்கடைந்திடுநாள். (க)
செங்கரங்குலைந்திமையவர்திசைதொறுமோடப்
பொங்கிமேல்வருங்காளகூடத்தினைப்பொருநீர்க்
கங்கைவேணியன்கந்தரத்தடக்கியகாலத்
தெங்கிருந்தனன்றெளியநீயியம்புதியென்றாள். (உ)
மறுவிலாகமவல்லியிவ்வாசகமுரைப்ப
நிறைகொளாரணப்பாவையும்வேலைசூழ்நிலமேல்
இறைவனுலகாலத்தினைநுகர்ந்தமையெல்லாம்
உறுதியாகநீகேளெனவுரைசெயலுற்றாள். (ங)
முத்தைவென்றிடுமுகிணகைக்கன்னன்மாமொழியாய்
இத்தலம்புகழ்ந்திடவிளங்கிருக்குவேதத்தில்
அத்தியாயமெட்டாவதிலடைவுகுன்றமல்
வைத்தசீரிருபத்தின்மூன்றனவர்க்கத்தில். (ச)
தேங்குசீர்புனையுருத்திரனைபாத்திரத்தால்
ஓங்குநாரணனுகர்ந்தனன்விடத்தையென்றோதும்
ஈங்கிவ்வாறுரைத்திட்டவேதப்பொருட்கிசையப்
பாங்குசேர்புராணங்களும்பகர்ந்திடும்படிகேள். (ரு)

பகவத்ஸ்ரூபானுபவத்திலரனுக்குக்கிடைத்த
விஷசமர்ப்பணமென்றறிக.

நத்துவேலைவாய்விடமெழக்கலங்கிவிண்ணவர்கள்
உத்தமாசலமொன்றினில்யோகசிந்தையனுய்
முத்தியாசையாற்றவஞ்செயுமுக்கண்வானவனேப்
பத்தியாலடிபணிந்தனர்தங்குறைபகர்வார். (சா)

தேவர்தோத்திரஞ்செய்யலுஞ்சிகரமாலிமயப்
பாவைவாண்முகப்பங்கயந்தனையரன்பார்த்துக்
காவியங்கணுய்கலங்கியவிவர்க்குபகாரம்
மேவுமன்பினுல்யாமினிச்செய்தலேவேண்டும். (எ)

உலகின்மேலுபகாரங்களொருவருக்கொருவா
இலகுமன்பினுற்செய்வனசெய்வனவெல்லாம்
சொலினவர்க்கவர்க்கேயலவொன்றுபல்லுயிர்க்கும்
அலகிலந்தரியாமியாமாலுகந்தருளும். (அ)

ஆதலாலறவாழியானுக்குகப்பாகத்
தீதிலாதவித்தேவருக்கின்னலைத்தீர்த்துப்
பேர்தவெம்மையாய்ப்புகைபரந்தங்கியிற்பொங்கும்
ஓதைவேலைநஞ்சுண்பனுவெனுருகணத்தென்றுன். (க)

இந்துநேர்நுதல்வல்லியேயிந்தவாறெல்லாம்
உந்துதெண்டிரைவேலைசூழுலகுளோருவப்ப
முந்துபாகவதத்தினிலஞ்சுடன்மூன்றும்
கந்தமேழதாமத்தியாயத்தினிற்கழறும். (ய)

பட்டவாணுதல்வல்லிகேளின்னமும்பயிலும்
திட்டிமூன்றினுள்கருடவாகனத்தியானத்தால்
வட்டவாரிதிநஞ்சையுண்டேனென்றுமகிழ்வால்
கட்டுரைத்தவாறுரைசெயுங்காருடகவசம். (யக)

அன்னமென்னடையாயினைழயேயவைவையன்றித்
தன்னைநேரிலாநாமமூன்றினையுமுச்சரித்து
நன்னிலம்புகழ்கருடவாகனத்தியானத்தால்
கன்னிமேவியபங்கினுன்காளகூடத்தை. (யஉ)

பரிகினேனெனப்பகர்ந்தமைபதுமமாபுராணத்
துரைசெயுத்தரகாண்டத்திலோங்கத்தியாயம்
நிரைகொண்முப்பதோடேழதாய்நிகழ்வதுநெடுநீர்த்
தரையின்மாந்தர்களுக்கெலாம்வெளிபெறச்சாற்றும். (யங)

அடருமாமலர்க்குழலினுயாதலினுலே
கடிதுநெற்றியங்கண்ணினுற்காமனைக்காய்ந்த
இடபவாகனற்கந்தரியாமியாயிருந்து
விடநுகர்ந்தருள்பரம்பரன்விண்டுவேயென்முள். (௰௪)

ரு-வது, சர்வசங்காரவத்து நிருணயப்படல முற்றும்.
ஆ படலம் உஅ-இ - திருவிருத்தம்-ருஎஅ.
அரிதாசர்திருவடிகளேசரணம்.

---

## சு-வது, வரபாலனப்படலம்.

### க-வது, கைலாயயாத்திரைப் பரிச்சேதம்.

(வேறு.)

என்னமறைவல்லியிதுகூறவுயராகமவிளங்கொடிசொல்வாய்
அன்னநடையாயரவணைத்துயிலுமாதிபரனுகிலவன்முன்
மன்னன்வசுதேவன்மகனுனவவதாரமதின்மைந்தனருளென்
றின்னருளரன்றனையிரந்ததரிவமுசமியல்பாய்மொழியுமே. (க)

என்றலுமியற்சுருதிவல்லிநகைசெய்தொளிருமிந்துநுதலாய்
மன்றல்புனைநெஞ்சடிலமௌலிமகதேவனைமகற்றருதியென்
றன்னுமலர்மங்கைபதிசென்றதுவுமுள்ளததனுக்கவனுடம்
மின்றவழ்மணிச்சிகரவெள்ளிமலைநாதனும்வியந்தருளியே. (உ)

பேசுமலராசனனுநானுமுதலுன்னிடைபிறந்ததுகொடே
கேசவனெனும்பெயர்கிளைத்தனைசெகத்ததுகிடக்கமறைநூல்
சாசுவதமாகவளர்நீமருவுமிந்தவவதாரமதிலும்
ஓசைபெறுநாரணகுமாராகளனேகனையுகந்துதவினுய். (ங)

அப்படியிருக்கவுமகன்றபுவியிற்புதல்வரற்றவர்கள்போல்
இப்பொழுதுநாடகநடித்தபடிநன்றெனவிசைத்தருளியே
செப்பமிகுகைம்மணிமுழக்கிநிறைதூபமொடுதீபமுமளித்
தொப்பரியமாயனைமகிழ்ந்துபசரித்தகதையோடைநுதலாய். (ச)

அற்பவிடையாகமமடந்தையும்வியப்புடனதற்குரைசெய்வாள்
சற்பவணையானுமைபதிக்கதிபனும்பரவுதந்தையுமெனில்
சொற்பெறுபசுந்துளவமாலையணியந்தமதுசூதனன்முன்னுன்
நற்பரசுபாணிவராமவவதாரமதினுடறியவே. (ரு)

எங்கள்சிவன்மெய்ப்பிரிவதானசமதக்கினியிடத்தவதரித்
தங்கயிலைவெற்பணுகியந்தவரனேகுருவுமாகநெடுநாள்
இங்கிதமுணர்ந்தனுசரித்துவரிவிற்றெழிலியற்றியிடுமோ
மங்கலமிகும்புவனமீதெனலுமச்சுருதிவல்லிமொழிவாள். (சு)

மெய்த்தயதரற்கவதரித்துமிகுகோசிகவிருத்தமுனிபால்
எத்தகையவித்தையுமியற்றிமகிழ்வுற்றனனிராகவபிரான்
அத்தயரதப்பரியுமப்பெரியகோசிகவருந்தவனுமே
உத்தமவிராகவனின்மேலவர்களோவெனவுரைத்திடலுமே. (எ)

வாசிபெறுமாகமமடந்தைபகர்வாளரிமகத்துவமெலாம்
பாசுபதமாகணைதனஞ்சயர்பெறும்படிபணிக்கயிலைவாழ்
ஈசனையிரந்ததுகொடேயறியலானதெனவின்னளிகளின்
பூசலொழியாவளகவாரணமடந்தைகிளிபோன்மொழிகுவாள். (அ)

சீர்பெறுபெரும்புவனநாயகனசோதைதருமெங்கள்பெருமான்
தாரணியிழந்ததருமற்கரசளிப்பதுதமக்கருமைபோல்
வீரவரவத்துவசனுக்கிதமுரைத்தவன்வெறுத்திடவுமஞ்
சூரருளுகென்றனனவன்கபடநாடகமுரைக்கவெளிதோ. (கூ)

உ-வது, அரன் அறவாழியை ஆராதித்தபரிச்சேதம்.

என்னவியலாரணமடந்தையிதெலாமினிதியம்பியிடலும்
புன்னைமலரோதிமயிலாகமமடந்தைபொருள்கொண்டுமொழிவாள
கன்னன்மொழியாயரியையித்தனைமதிப்பினொடுகட்டுரைசெய்தாய
அந்நயனபுண்டரிகனுகியமுகுந்தனரவாபரணனை. (க)

பத்துநூறெனதிருநாமமிகுமன்பொடுபடித்தருளிநீள்
புத்தியாலேதனதுகண்மலரிடந்துமகபூசனைசெய்தே
நெயத்தசீராழியையிரந்தபடிதிண்ணமிதுநிற்குமிருநால்
அத்தியாயத்திலுயர்கூருமபுராணமடைவாசியிடவே. (உ)

ஏருலவுபாரபரதனுளவனமேவியவிராகவபிரான்
வீரவரராவணனைவென்றபின்மகோததிவிளங்குதனையில்
தாரணியும்வேணியனையன்பொடுபதிட்டைசெய்ததன்மைதனையும்
பாருலகிலக்கமடநூல்பலதிருத்தமொடுபன்னியிடுமால். (ங)

மறறிதுவுமன்றிமயிலேபுவிமதித்தவுபமன்னியுவெனும்
சுறறவனிடத்திலுபதேசமதுபெற்றருளிநந்தகுமரன்
நெற்றிவிழிஈனையுபாசனைசெய்தானதுவுநீடுகடல்சூழ்
உற்றபுவிமீதுபிரசித்தியெனமேன்மைபெறவோதியிடவே (ச)

ஆரநகையாரணமடந்தையும்வியப்புடனதற்குரைசெய்வாள
நாரணனுமாபதியையர்ச்சனைசெய்தங்கவனயந்தவருளால்
ஏரமர்சுடர்ததிகிரிபெற்றனனிலத்தெனவெடுத்துரைசெய்தாய்
சீரணியுமந்தவணியாழியினியறகையுரைசெயவனதுகேள். (ரு)

எய்த்திடாவாசகமிருக்கிலுயரட்டகமதேழிலொருநால்
அத்தியாயத்திலுமிதன்றியெசுமாமறையிலாரணமதின்
மொய்த்தசீர்மூந்தியபரிச்சமதிலெட்டிஞெடுமூன்றடைவிலே
வைத்தஞாலத்தவர்வடித்தநலமேவுமனுவாகமதிலும். (௬)

உத்திகூர்சாமமதிலுத்தரவிருக்கினிடைவொன்பதெனநீ
டத்தியாயத்தினும்விளங்கநருவத்துமிவையன்றிநிலமேல்
வத்துவாகும்பிருகதாரணிபம்விஞ்சுகடவல்லிதனினும்
சுத்திகூராழிதனைவேறுமறைசொல்லியதுறைத்துறைதொறும். (௭)

அந்தவறவாழியரவிந்தவிழிமாலெனவறுதியெனவும்
சந்ததமவன்றனதுமுந்துடைமையாயனுசரிக்குமெனவும்
எந்தவுலகத்தினும்வியாபகமதாகியவனேவல்வழியே
நிந்தைபுனைதுட்டர்களைநீறுசெயுமென்னவுநிகழ்த்தியிடுமால். (அ)

வைத்தசீர்மாமறையுளாத்தவதனுக்கிசையவஞ்சியிடையாய்
பத்திசேர்விண்டுவின்புராணமுதலங்கிசமிருபத்திருதிறத்
தத்தியாயத்திஞெடுபாகவதநூலிருபதஞ்சினுடனே
சித்திகூரும்பகுதிதத்துவவிதத்தினதிதேவதையதாய. (௯)

திருந்தியபிராகிருதமன்றியொளிதுன்றிமிகுதிவ்வியமுமாய்
வருந்திகரியாதிகளைநீடுலகழிந்திடுமகப்பிரளயம்
பொருந்தியிடுமூழிகளினுங்கிளர்சுரும்பினணிபொங்கியமணம்
தருந்துளபமாலையரிதஞ்சமுறவன்பொடுதரிக்குமெனவும். (௰)

அந்தவொளிசேருமணியாழியவனுணையிலனைத்துலகமும்
சிந்தியிடுமூழிதொறுமென்னவும்விளங்கும்வகைசெப்பியிடுமால்
உந்திடபவாகனனுமந்தவறவாழியையுபாசனைசெய்தே
முந்துதிரிசூலவயில்பெற்றிலகினேனெனமொழிந்தருளினான். (௰௧)

இன்னபயனச்சுருதிநாலினுடனஞ்செனவிசைத்துனாசெயும்
பன்னரியபாரதகதைக்குளியல்கன்னனுயர்பருவமொழியும்
அன்னநடையாய்பொருளிதாதலினரன்றனதிதேவதையதாம்
மின்னிலகுமாழிதனைமால்பெறவழங்கியதுமெய்ம்மையலவே. (௰௨)

## ௩-வது, மோகனநூலுற்பத்திப் பரிச்சேதம்.

என்றுசுருதிக்கொடியிசைப்பவியலாகமமெனுந்தெரிவையும்
நன்றுனாசெய்தாயிமயநங்கையொருபங்கனிடைநாகவணையான்
வென்றிகொள்சுடர்த்திகிரிபெற்றதிலையாகிலவன்மெய்ம்மைபெறவே
சென்றுமகபூசைதனையேன்மகிதலத்திடைசெயக்கருமமே. (௧)

வேறு.

என்றாகமப்பாவையிவைகூறவெழிலாரணக்கோதையும்
மன்றார்குழற்றோகையேயிதோர்பொருளாய்வகுத்தோதினும்
குன்றாதகுணமேருசிகரற்றகோதண்டகுருராகவன்
தன்றாதைதாய்சொன்னமொழிபாலனஞ்செய்ததலைநாளிலே. (௨)
வரமந்திரத்தெய்வமுனிவோர்கடாம்வைகிவாழ்கின்றவாச்
சிரமந்தொறும்புக்கருச்சித்துமம்போதிதீரத்திலே
உரமுந்துவருணன்றனைச்சென்றுபாசித்துமொன்றேசெய்தான்
அரமன்னுகண்ணைப்சொல்லவரும்பரந்தாமமாவார்களோ. (௩)
இதுசிறகவாராகமென்னும்புராணத்திலெழுபானோடைந்
சுதவத்தியாயக்துருத்திரப்பெருங்கீதையுள்ளாகவே.
மதுவுற்றபொற்கொன்றைமாலைச்சடாதாரமகதேவனிப் [டுகேள்.
பொதியத்துமுனியோடுமுன்சொன்னகதையொன்றுபொருள்கொண்
மருவுள்ளகமலாசனன்றனைப்பெற்றுமகிழ்நாளிலே
பெருவெள்ளமேயன்றிவேறொன்றுகாணப்பெறாதுற்றநான்
விரிவுள்ளவெள்ளத்தினிற்கண்டுகொண்டேன்வியப்பாகவே
உருவுள்ளநீலத்தடங்கொண்டலொப்பானவொருவத்துவை. (௫)
பேரின்னதிவனுக்கெனுந்தன்மையறிகின்றபேராசையால்
ஆரிங்குநீயென்றுவினவப்பரந்தாமமாய்நின்றவன்
ஈரொன்றுபுவனங்களீரேழினுக்குஞ்செழுஞ்சோதிநான்
ஏரொன்றுதிருநாமநாராயணன்காணெனக்கென்னவே. (௬)

ஆதிவராகபுராணத்தில் ஆதிநாராயணர் அம்பிகாபதிக்கு விஸ்வரூபதரிசனம்கொடுத்து தனது ஈஸ்வரத்வமும் சங்காரதவமும் வரம் அனுக்கிரகித்தகதை.

அந்நாமதேயத்தைநெடுநாளுகந்தோதியறிவுற்றபின்
நன்னாகசயனப்பரந்தாமனேயிங்குநன்றாகநின்
பொன்னானதிருமேனிதெரிகின்றதிலையென்றோர் பொருள்செல்வம்
மின்னாயமணியாழிமாலீய்ந்தனன்ஞானவிழிதன்னையே. (௭)
மாசற்றஞானத்தடங்கண்களாலந்தமணிவண்ணனோர்
தேசுற்றவுருவத்தில்வெகுகோடியண்டங்கடிகழ்கின்றதும்
ஆசற்றமலருந்திதனினான்முகத்தேவனவதாரமும்
ஏசற்றவந்நான்முகத்தேவனிடைநானிருக்கின்றதும். (௮)
போராதரங்கூர்தரக்கண்டுதுதிசெயதபின்னாகவே
கூராழிநெடுமாயனருள்பொங்கிவரமின்றுகொள்கென்றலும்

சீரானவீசத்துவத்தோடுசேர்வஞ்ஞசீலத்துவமும்
ஏராருமூவர்க்குளொருமூர்த்தியாமாறுமீகென்னவே. (௯)
அருள்செய்துமகிழ்கின்றவயன்மேவுதிருவுந்தியரவிந்தன்முன்
மருள்செய்குணத்தோடேன்வடிவத்தையுங்கண்டுமற்றொலாம்
பொருள்செய்துதுதியார்களேயென்றுநாளும்புகழ்நதோதவத்
தெருள்செய்தஞானத்தர்சிந்தைக்குளுறையுஞ்செழுஞ்சோதியும். (௰)
நினைப்புகழ்ந்தண்டரண்டந்தருந்தெய்வநீயென்றுகொண்
டென்னைப்பரந்தாமமென்னுமன்முனிவோரிடத்துஞ்சொல்வித்
தநுட்பமதிநீயுமடர்பொய்யைமெய்யோடடுத்துண்மைபோல்
பன்னிப்பரப்பானமாமோகநெடுநூல்கள்பண்ணென்னவே. (௰௧)
மிக்குற்றமகிழ்வோடுநான்மோகவெகுநூல்விரித்துச்சொல்கேன்
அக்கற்பிதத்தாமதச்சிற்பநூறன்னிலமரும்பொருட்
கொக்கத்தலத்தென்னைவெகுமானநீசெய்துகப்பாயெனச்
சக்கரப்படைச்செங்கைமணிவண்ணனிமையோர்கடந்தம்பிரான். ௰௨
நந்துங்கடற்பாரிலுளகண்டகப்பேர்கணல்லாவிவான்
உந்தும்படிக்கங்குவருகின்றவவதாரவுருவத்தினும்
வந்துன்னையர்ச்சித்துவரமுங்கொள்வோமென்றுவரநல்கினன்
பைந்தென்றறருவெற்பினுயநாளும்வெகுமானபதியாயினேன். (௰௩)
என்றின்னசொல்லைத்தனிததோதினன்செய்கையீதாதலால்
பொன்றுன்றுகொன்றைச்சடைச்சங்கரனைநீடுபுவனத்திலே
மின்றன்னைநகுமாழிமாமாயன்மகபூசைவிநயஞ்செய்தான்
அன்றன்னவன்கொண்டவரபாலனஞ்செய்வதற்காகவே. (௰௪)

௪-வது, வரபாலனத்துக் குதாரணப்பரிச்சேதம்.

மருவுற்றகுழல்வல்லியேயிங்கிதற்கொக்கமகபாரதத்
துறைபெற்றநாராயணீயத்தினிறசொல்லியுளவாய்மைகேள்
முரசகொடித்தன்மபூபாலனஞ்செய்யமுளரிக்கணால்
அருள்மிக்கவசுதேவன்மைந்தன்றனைச்செம்பொனடிபோற்றியே. (௧)

உலகைப்படைத்தற்களித்தற்கழித்தற்குகப்பாகியே
அலகற்றவிளையாடல்புரிகின்றவொருமூர்த்தியாய்நின்றநீ
சலிலச்சடைத்தேவர்முதலோனையபிவாதனம்பண்ணியே
பலவர்க்கமகபூசையுஞ்செய்ததற்கேதுபணியென்னவே. (௨)

ஆவின்குலம்வாழமழைகாக்கமலையொன்றையன்றேந்திடும்
கோவுஞ்சொல்வானீடுமுலகத்திலுளசீவகோடிக்கெலாம்
மேவந்தரான்மாவும்யானாகையாலங்கிவிழிநெற்றியந்
தேவன்றனிதயத்துநானேயிருக்கின்றசெயறிண்ணமால். (௩)

அதனுலியானேயெனேப்போற்றியாராதனம்பண்ணினேன்
இதுநான்செயாதேயிருந்தால்மகிபாலவென்மேனியாம்
மதிவேணியன்றன்னேமற்ருேகளர்ச்சிக்கமதிசெய்வரோ
கதிர்சூழுமூலகுக்கியான்செய்தசெய்கைகண்டல்லவோ. (௪)

உரந்தாவுபுயவீரவிதுவன்றியெனின்மிக்கவொருதெய்வமும்
வரந்தாவெனக்கென்னவென்பாலிலாவைபவமுமில்லையால்
பொருந்தாதரத்தாலுனக்கிந்தவுண்மைப்பொருள்கூறினேன்
தெரிந்தேகொளென்ருனிதன்ருேவவன்மாயைசெயும்வண்ணமே. (௫)

எனவிச்செசான்மறைவல்லிசொலவாகமப்பாவையிறையோனேமால்
மனமுறறவரபாலனப்பூசைசெயவங்குவந்தானெனில்
கனமிக்கபிரமத்தியார்சன்னிதிக்கேகழித்தானெனத்
தனுவொத்தநுதலந்தமறைவல்லியொருவாசகங்கூறுவாள். (௬)

பிரமததியாகின்றபிரசங்கமந்தப்பெருங்கூர்மமாம்
வரமாபுராணததுமில்லேவான்மிகத்தும்வழங்காததாற்
றிரமற்றவண்மைப்புராணத்தின்மன்னுந்திறஞ்செப்பவந்
துமைமாட்சியர்னீயியற்கைசசொல்சொன்னலதொப்பாகுமோ. (௭)

அல்லாமலதுவேசுபாவச்சொல்லன்றெண்ணிலருமாமறைக்
கெல்லாம்விருத்தந்தருஞ்சுத்தசாத்தீகமென்ருேதிடும
சொல்லார்விசாலபபுராணப்பொருட்குந்துவக்கில்லேயால்
வில்லார்நுதற்கோதையேயுண்டதற்கின்னம்விபரங்களே. (அ)

வடவைப்பெருந்தீயின்மேல்வந்தோர்பனிவந்துவலிசெய்யினும்
சுடாமிக்கநேமிக்கைநெடுமாலேயத்தீமைதொடவல்லதோ
மடலுற்றமலரோதியாயாகமச்சீரமடந்தாயதற்
கடைவொத்தபிரமாணமுளவோதுகின்றேனதன்போடுகேள். (௯)

௫-வது, கண்டாகன்றன் பரிச்சேதம்.

வேறு.

வண்டார்செம்பொன்மயம்பெறுகொன்றைத்
தண்டாமம்புனேசங்கரனுர்மேல்
உண்டாகும்பரிவாலுயர்ஞானக்
கண்டாகன்றனெனுங்கதிர்வேலான், (௧)

புவியிற்பாசமெனும்பொறிசேரும்
நவையற்ருேர்புகழ்நாரணநாமம்
எவிதத்தாலுறுமோவெனவெண்ணிச்
செவியிற்கண்டைதெழிப்பநடப்பான். (௨)

அருந்திவசங்களநேகமுடம்பு
வருந்திநிரந்தரமான்மழுவெய்தி
இருந்தகரத்தனிரங்கிடுமாறு
திருந்துதவங்கள்சிறப்பொடுசெய்தான் (௩)

ஒழிவிறவத்தையுகந்துகரத்தோர்
மழுவமரீசன்வரங்கொளெனத்தோள்
எழுவைநிகர்க்குமியக்கர்கள்கோமான்
அழிவறுமுத்தியையருளுதியென்றான். (௪)

முத்தியையருளுதியென்னலுமுன்னோர்
அத்தியுரித்தவனப்பொருளேநின்
புத்தியிலிட்டமெனிற்புகழ்மாலைப்
பத்திசெய்வந்துபவித்திடுமென்றான். (௫)

ஈதுனைசெய்யவியக்கனதிங்கே
நீதரிலென்னெனநின்றுபிணங்கக்
கோதறுமுத்திகொடுப்பவன்மால்வே
றேதுபதங்களிலுய்த்திடுவோம்நாம். (௬)

என்றலுமாலையிகழ்ந்திதுகாறும்
புன்றொழில்செய்தனமென்றுபுலம்பா
வன்றிறலங்கவன்வன்செவியிற்சேர்
மின்றிகழ்கண்டையைவீசியெறிந்தே. (௭)

அப்பெருமுத்தியளித்தருள்கூரும்
மைப்புயல்மேனிவலம்புரிமாயன்
எப்பொழுதென்கணெதிர்ப்படுமென்றே
ஒப்பறுகாசிலுறைந்திடுநாளில். (௮)

அந்தவனந்தனிலங்கொருநாண்மைக்
கந்தரன்வாழ்கயிலைக்குநடப்பான்
வந்துதரித்தனன்மாதுலன்வாளுள்
சிந்தியமால்வசுதேவகுமாரன். (௯)

பேரருளாளன்கண்டாகன்றனுக்குலிங்கபத்திவிட்டபிறகு அவனது பிரமஹத்திதீர்த்தத்துக்காகஉதகரித்தஇக்கதை.

ஆணிப்பொற்கலையானருளாளன்
மாணுற்றவ்வழிவந்தனனென்னப்
பேணிச்செய்தபெருந்தவனென்றும்
காணிக்கைப்பொருள்கண்டிலனாகி. (௰)

மெய்த்தவர்தம்மொடுவேள்விசெயுஞ்சீர்
உத்தமவேதனொருத்தனையன்றன்
குசதிவதைத்தகொடும்பிணமுன்னே
வைத்திருபாதம்வணங்கினன்மாதோ. (மக)

மன்றலர்பாதம்வணங்கிடுவானோ
டின்றிதுசெய்ததெனிப்படியென்றே
வென்றிகொண்மால்சொல்மேதகுகண்டா
கன்றன்மகிழ்ந்திதுகட்டுரைசெய்வான். (மஉ)

விதிப்படிநான்முறைவேள்வியநேகம்
மதிப்பொடுசெய்தமகத்தவனாவி
பதைப்பவதைத்ததுமின்றுபழிப்பில்
புதுப்பிணமென்றிருபொன்னடிதாழ. (மங)

கண்ணனவன்செயல்கண்டுநகைத்திங்
கெண்ணமுனக்கினியேதெனவோடும்
புண்ணியமிக்கபுராதனருக்கு
நண்ணருமுத்தியைநல்குதியென்றான். (மச)

கண்டைசெவுப்புடைகட்டினனையும்
உண்டுமனத்தினுமொண்பெயரின்றும்
தண்டலில்பத்திதழைக்கையினாலே
கொண்டனைமுத்திகொடுத்தனமென்றான். (மரு)

சுு-வது, சிற்வேறுதுகவைபவப்பரிசசேதம்.

அப்படிமுத்தியளித்தனமென்றே
இப்புவனங்களோரேழுளமாயன்
செப்பமகிழ்ந்துசெருக்குமியக்கன்
ஒப்பறுவாசகமொன்றுரைசெய்தான். (க)

பொன்னார்நேமிபொருந்துகையாய்கேள்
உன்னையின்னமுமோருபகாரம்
இன்னுளிங்குளதேதெனிலென்றன்
பின்னுனுண்டோர்பெருந்திறல்வீரன். (உ)

அன்னவனுக்குமளித்தருள்வாய்நீ
என்றெடுமுத்தியெனத்தொழுவானின்
பின்னவன்முத்திபெறும்படியென்மேல்
உன்னிகர்பத்தியனேவெனவோத. (ங)

நின்மேலன்புள நீர்மையிலானீ
என்மேலன்புகொடுதியெனப்பின்
உன்மேலன்பினனேனெவவோத
என்மேலும்பரிவில்லவனென்றான். (ச)

அன்பான்மாலுமவன்றனைவீரா
என்பாலன்பிலனென்னருளைச்சேர்
உன்பாலன்பிலனுற்றவனென்னே
தன்பான்முத்திதரும்படியென்றான். (ரு)

ஆனவியக்கனுமச்சுதவென்மேல்
தானவமானசதஞ்செயுமேனும்
நானவன்மேன்மிகநண்பினைவைத்தேன்
ஆனமையாலருளத்தகுமென்றான். (௬)

ஏரணிமாயனுமெம்மைவிரும்பும்
பேறொழினின்னருள்பெற்றவனன்றே
ஆமொவனாகிலுமாகுகவின்பம்
கூரியமுத்திகொடுத்தனமென்றான். (எ)

ஏத்தாவன்பிவனுக்குமிவன்றன்
மூத்தானுக்குநன்முத்தியளித்தே
நீத்தாநின்மலநெஞ்சில்விளங்கும்
பூத்தாமப்புயபூதரமாலும். (அ)

கொன்றவனின்றுகொணர்ந்தசரீரத்
தொன்றியசீவனுமொண்புவிநின்றும்
சென்றுயர்முத்திசெறிந்திடுமாறே
நன்றியினல்வரநல்கினன்மாதோ. (௯)

ஈதரிவம்சமியம்புமணங்கே
ஆதலின்மாலடியார்கடமக்கும்
பாதகமென்பதுபற்றுதலுண்டோ
ஓதெனவாகமவொண்ணுதல்சொல்வாள். (ய)

வன்புகழ்மாவிடைவல்வினைசேரா
தென்பவள்போலரனெஞ்சவில்பத்தர்க்
கன்பொடுமுத்தியளித்திலனென்றாய்
மின்பொலிவாணகைவேதமடந்தாய். (யக)

அந்தமிலாதவனைத்துயிருக்கும்
முந்தியகாசியின்முத்தியளிப்பான்
இந்துமுடித்தருளீசுரனன்றோ
பைந்திணைசூழ்தருபாரினிலென்றாள். (சஉ)

எ-வது, கைலையாளிக்குப்பிரமத்திதீர்த்தபரிச்சேதம்.

வேறு.

வாசிபெறுமாகமமடந்தையிதுகூறமறைமாதுமொழிவாள்
காசணிதனத்துமயிலேயனையதாங்கிகழ்காசிவளமும்
பேசுமதிசூடுசிவனங்குறையுமாலினருள்பெற்றமையுமப்
பாசுபதமுத்தியருடன்மையுமுரைப்பனதுபண்பினொடுகேள். (க)

சீதவனமாநதிசெழுஞ்சடிலமேவியதிகம்பரன்முனாள்
வேதனொருசென்னியையறுத்தமகபாதகமிகத்தொடர்கையான்
மாதவனதாகியவளம்பெரியகாசியினைவந்தணுகினன்
ஆதவனையஞ்சுமிருள்போலகலகின்றததிபாதகமரோ. (உ)

தொடாநதுவருபாதகமகன்றபடிகண்டுமதிசூடுசடையான்
மடந்தைவளமாமாபனைவணங்கிமதுசூதனங்கின்மாநகரையான்
அடைந்தனவின்முன்னையதிபாதகமகன்றதவனித்தலமெலாம
நடந்தகழறேய்வறவளாங்கிலகினேனெனநவின்றருளவே. (ங)

காசிநகர்மாதவனுநேயமுறவேகரளகந்தரனுடன்
தேசுறுசுவாகதமுரைத்ததுவெகுமானமமைசெய்தருளிநின்
மாசறுமணிச்சிகரவெள்ளிமலைமேன்மருவிவாழமதியால்
வீசுநிலவார்சடையினுயகறியென்னவிடைகொண்டருளியே. (ச)
தாண்டுவிடையேறியுயர்காசிநிலமாகியதலத்தையகலத்
தூண்டியிடவேகமொடுதொல்லைவினையானதுதொடர்ந்துகொளலும்
மீண்டடிபணிந்தருளிவெள்ளிமலைநாயகன்விசும்புமுழுதும்
நீண்டுலகளந்தமுதல்வாவினையகேளெனநிகழ்த்தியிடுவான். (ரு)

அ-வது, காசியைகபாலிக்குப்ரசாதித்தபரிச்சேதம்.

முப்புவனமெங்குமுழல்போழ்துமகலாமலெனைமொய்த்துவருமச்
செப்பரியபாதகமுன்னெல்லைபுகவஞ்சியயல்சேமமுறநின்
றப்புறமகன்றனவில்வந்துதொடர்கின்றவதனைலசினேன்
இப்பெரியகாசிதனில்யானினிதிருக்கவரமீதியெனவே. (க)
கண்ணன்மகிழ்வுற்றிலகுகாசிநகரைப்பெருகுகங்கையெனுமப்
பெண்ணையமர்வித்தசடையற்குதவிநீடுபிரயாகைதனிலே

நண்ணினனெனப்பகருநாரதியமச்சிவனுநாளதுமுதல்
புண்ணியமிகுத்துவளர்காசிதனதாயெழில்பொருந்தினனரோ. (உ)

'கூ-வது, ஸ்ரீராமதாரகப்பிரமமந்திர உபதேசப்பரிச்சேதம.

கண்ணுதலெனுங்கடவுள்கங்கையுமையாருபதிகந்தனுடனே
நண்ணியுயர்காசியிலிருந்துசகலர்க்கும்வரநல்குவதுகேட்
டெண்ணரியயோகியருஞானியருமெய்த்தவமிழைத்துவளரும்
புண்ணியருமப்பதியோடாறிடமறும்படிபுகுந்தனுகினர். (க)

பூசியிடுபூதியர்புனைந்தசெபமாலையர்பொறுத்தசடையர்
ஆசையருசிந்தையினளாவகையெழுத்தினைவழுத்துமுரவோர்
நாசிலகுவற்கலையர்நெற்றிநிமிரும்புருவர்சோர்வொழியவே
நாசிமுனைவைத்தநயனத்தருயர்மூத்திதனைநச்சுதலுமே. (உ)

இத்தகையமாதவமிருந்தவர்கள்காமியமெமக்கரியதாம்
முத்தியெனிலாங்கதனையெப்படிகொடுத்தினிமுடிக்குவமென
அத்தியையுரித்தருளுமற்புதனனைத்துலகுமாளுடையவன்
புத்திசெயுமவ்வளவில்வந்தனன்விளங்குலவுபுண்டரிகனே. (ங)

வந்தமலராசனனையீசன்மகபூசைவழிபட்டருளியென்
புந்தியிலிருந்தகுறைபோயதெனநின்றெதிர்புகழ்ந்திடுதலும்
சிந்தையினினைந்தபொருள்யாவதெனநின்னருள்சிறந்துளவெனக்
கெந்தையரிதானபொருளில்லையெனவோதியிதிசைதனனரோ (ச)

செப்பரியமுத்திதருதெய்வமெனவென்னையிவர்சிந்தனைசெய்தே
இப்பெரியமாதவமிழைக்குனர்கண்மற்றிவருநின்னருளினல்
ஒப்பரியபேறுபெறநானுதவவேதினியுபாயமெனலும்
மைப்பயின்மிடற்றமலனுக்குயர்கிராணமதிவாசமலரோன். (ரு)

வண்மைபெறுதாரகமகப்பிரமமானதிருமந்திரமுகந்
துண்மையுபதேசமுறவோதிபிதுகங்கைநதியொண்கரையிலே
திண்மைபெறுகாயம்விடுவாரசெவியினியுரைதிருந்தவவரும்
நுண்மைபெறுமுத்தியுறுவாரொனமறைந்தனனொடிப்பொழுதிலே (சு)

அன்னவுபதேசவரமந்திரமெலாமினிதறிந்தருளியே
மன்னுயிரனைத்தினையுமுத்தியுறுவித்தரன்மகிழ்ச்சிபெறுமால்
இன்னசொலகத்தியவிராமவரசங்கிதையியம்புமிதுவும்
பன்னியுரைசெய்யினவகண்டவுலகத்தின்மிகுபாடமெனவே. (எ)

சு-வது, வரபாலனப்படல முற்றும். ஆ திருவிருத்தம் - அரு.

அரிதாசர் திருவடிகளேசரணம்.

## எ-வது, சைவாகமவிதிப்படலம்.

### க-வது, திருநீற்றுப்பஞ்சாட்சரப் பரிச்சேதம்.

வேறு.

அன்னவாசகங்கேட்டாகமக் கொடியுமறைகுவாளாரண மடந்தாய், பன்னகாபரணனி ராமமந்திரத்தாற் பாரின்மேன் முத்தியீகின்றான், என்னவேயுரைத்தாயாகமப்படியாலெழிற்சிவதீக்கைபெற்றுயர்வோர், தன்னைநேரில்லாமுத்திசேர்வதற்குச்சந்தயந்தான்சிறிதுளதோ.

தெய்வவெண்ணீற்றின் மகிமையுமறையிற்றெரிந்தபஞ்சாக்கரச்சிறப்பும், மெய்வருமுருத்திராக்கதாரணமுமிகுசிவபூசையின்விதியும், கைவருஞ்சரிதை கிரிகையோக முடன்காட்சிசேர் ஞானத்தினியல்பும், சைவசித்தாந்ததத்துவபேதத்தன்மைதொண்ணூறுமோராறும்(உ)

பரிவுடன்பஞ்சப்பிரமமுன்னுணர்ந்துபரசிவன்றனையுறுபண்பும்
விரவியநிருமாலியவிசேடணமும்வீரமாயேச்சுரசமய
தருமமாமிலிங்கதாரணத்தியல்புந்தகுசிவபுராணமேன்மையுநீள்
சுருதியின்சமானமானவாகமத்தின்சொலும்பரமார்த்தநிச்சயமும் (ங)

தெரிந்தபோதன்றிச்சிவனதுமகிமைதெளியுமோசெவ்வரிபரந்தகருந்தடங்கண்ணுமையவரொவர்க்குந் தாங்கண்டதே காட்சியாயிராதோ, விரிந்தவிப்பொருளைச்சுருக்கியொன்றென்றாய் வெளிபெறவிளம்பிவுன்மனத்தைப், பொருந்துவிக்கின்றேன்கேட்டியாலென்றுபுலப்படப்புகலுவதானுள். (ச)

சிந்துரநுதலாய்தொல்லைநாள்விளங்குந்தெய்வலோகத்திடைநின்று
மிந்தலோகத்தைப்பவித்திரமாக்கவிழிந்தன பசுக்களினினங்கள்
அந்தமேன்மையுளபசுக்களுக்கன்பாலருந்து தற்குரியனபசும்புல்
தந்துமுன்வைத்தங்கவைபொசித்ததற்பின்ருகமும்புனலினுற்றணித்து

சத்தியோசாதமந்திரத்தாற்கோமயந்தனைத் தனைவிழாதேற்றுச்
சித்தியாம்வாமதேவமந்திரத்தாற்றிரளைசெய்தகோரமந்திரத்தால்
வைத்துலர்த்தித்தற்புருடமந்திரத்தால்வளர்பெருங்கனலிட விளைவித்
தித்தலம்புகழீசானமந்திரத்தாலெழில்பெறவிளைந்தபினெடுத்து. (ரு)
பன்மலர்சுகந்தம்பற்றுவித்தந்தப்பவித்திரநீற்றினைப்புனலின்
முன்முழிகிப்பின்முழுதுமுத்தூளமுறைமுழுகுதல்விதியென்றும்
இன்மலர்ப்புனலின்மூழ்குவதரிதாயிருந்துளவிடத்தினிலெழில்சேர்
நின்மலநீறேயாடுதலசுத்தநெடுநிலமாந்தருக்கென்றும். (எ)
இலகுசிறுத்தூளஞ்செயுமிடத்தீசானமந்திரத்தினுற்சிரமும்
பொலியுமானனந்தற்புருடமந்திரத்தும்பொங்ககோரத்தினுன்மார்பும்
நலமிகுவாமதேவமந்திரத்தாலுபியுமவயவமுழுதும்
அலகறுசெஞ்சொற்சத்தியோசாதமானமாமந்திரத்தாலும். (அ)

முறைபிறழாமற்றரிப்பதுதானே முக்கியமாந்தருக்கென்றும்
நிறையுமுத்தூளமியன்றிலதாகினிடிரிபுண்டரந்தனையே
அறிவுடன்றரிப்பதமைந்திடுமென்றுமந்தமுப்புண்டரந்தரிப்ப
துறுவதற்சனிமத்திமையநாமிகையென் றேதுமங்குலிகளாலென்றும்
மொழியுமத்திரிபுண்டரக்குறிதான்மும்மூர்த்திகண்முழுமையமென்றும்
அழகுசேர்திருவெண்ணீற்றினைச்சிரமேயாதியாவடைவுகுன்றாமல்
வழுவறுபாதம்பெருவிரலீறுவளமைகூறாகமத்தடைவே [தும்.
எழுதிடமெண்ணும்கெண்ணிரண்டிருநாலீரிரண்டேக மென்றிசைத்
சிரத்தினிலயனுநெற்றியிற்குகனுந்திகழ்கழுத்தினிற்கணபதியும
நிரைத்தட்ந்தோளினிடுகேசவனுநிறைந்திடுமார்பிலீசுரனும்
சுரித்தவுந்தியிற்பிரசாபதிதானுந்தொடைகளிலச்சுவினிகளும்
உரைத்தபாதத்திலுரகருமிவர்களுயரதிதேவதையென்றும். (கக)
தாழ்விலாவிந்தநீற்றினையணிவார்சகலதீர்த்தம்படிபலனும் [றும்
வேழ்வியாயிரஞ்செய்துள்ள புண்ணியமுமேவுவர் புவியின்மேலென்
சூழ்விசாலச்செஞ்சொல்லினுல்விளகுஞ்சுப்பிரபேதவாகமத்தில்
வாழ்வுகூறாரும்படலம்வெண்ணீற்றின்மகிமையைப்பகர்ந்திடலாலும்.
இலகிதற்கிசையவதருவசிரத்திலெண்ணுமஞ்சானகாண்டத்தில்
தஙகுபாசுபதவிரததீக்கையினைச்சாற்றியதகைமைசோதீக்கைக்
கங்கமாநீற்றுத்தூளனவிதியுமதற்குமந்திரங்களுமமைத்துப்
பொஙகுமந்நீற்றுத்தூளனமுத்திபொருந்துவித்திடுமெனலாலும் (௰௩)

திருவெண்ணீறெறுப்பதொருபொருளில்லைத் தெரிந்தபஞ்சாக் கரச்சிறப்பும், சுரிகருங்குழலாய்சொல்லுவேனதுதான் றூலபஞ்சாக்க கரமென்றும், விரவுசூக்குமபஞ்சாககரமென்றும்வேதவேதாந்தவேரான, பிரணவமுறுபஞ்சாககர மென்றும்பேதமூவேழதாய்ப் பிறக்கும்.
தேசுறுமிந்ததிருவெழுத்தைந்துஞ்சிவன்றிருமுகங்களைந்தினிலும்
மாசறவந்துதோன்றியாகமத்தின்வளம்பெறவளாந்துவாய்த்துளவால்
காசிபன்கௌசிகன்பரத்துவாசன்கௌதமனத்திரியென்போர்
ஆசறுமந்தவெழுததொனறுஞ்சிற்குமடைவிலேயிருடிகளாகும். (௰௫)

பெருகுசிரனுட்டுப்புத்திருட்டுப்புப் பிருகதிசெகதிமாசெகதி, விரவு மிப்பஞ்சாககரங்களுக் கடைவேமிக்க சந்தங்களின்விகற்பம், பொருவருங்கறுப்புச் செவப்புநீள்பச்சைபொன்மைவெண்மைகணிற ம,பொலிவாம்தரைபுனலங்கிவாயுவாசாயந்தகுதியாம் பூததத்துவஙகள.

சத்தியோசாதன்வாமனகோரன் றழைத்ததற்புருடனீசானன், சித்தியாமதிதெய்வதங்கண்மற்றந்தத்திருவெழுத்தைந்தொடோங்காரம், வைததுவேதியர்க்குச்செவிப்பதுவிகிதமற்றுளபோர்க்குமங், கையாக்கும், சுததமாம்பஞ்சாக்கரத்தையே செவிக்கத்தொல்லையாகமம் விதித்துளதால். (௰எ)

இன்னவஞ்செழுத்தின்மந்திரசெபத்தாலிகபரசித்தியாமென்று
சொன்னதுமாறுகியபடலத்திற்சுப்பிரபேதாகமத்துளதால்
அன்னதற்கெல்லாம்புவனதிட்டாந்தமாகவஞ்செழுத்தையுச்சரித்துத்
தன்னிகரில்லாச்சிவபதமடைந்தோர்தங்களுகெண்ணிலக்குளதோ.

உ-வது, உருதிராக்கப்பரிச்சேதம்.

அன்னவாகமத்திலறைந்தவப்படலத்தப்புகச்செஞ்சொலாரணங்கே
தன்னேநேரில்லாவுருத்திராக்கத்தின்றகுதியும்பகரநீதான்கேள்
கின்னரரியக்கர்சுராசுராமுனிவாகேசராகெருடாகந்தற்பா
மன்னிநின்றுபயமலரடிபோற்றவண்கயிலாயமால்வரையில் (௧)

வளர்பெருந்தெய்வவருடமாயிரங்கண்மணங்கமழ்மலரெனமயங்கி
அளியினம்பிறைமேறகதுவுசெஞ்சடையானணிமிடநயனமுயிருக்க
ஒளிகிளரவன்றன்கண்கணீர்மல்கியுகுபுனற்றுளிகள்பன்மணியாய்
விளைவுபெற்றதுமற்றந்தமாமணியேவிளங்குரீருருத்திராக்கமதால். (௨)

மற்றவைதம்மிலொருமுகமுடையமணிசிவனிரண்டுமாமுகத்தைப்
பெற்றதுசத்திமும்முகநாதம்பிறங்குநான்முகத்ததுவிந்து
முற்றுமைம்முகத்தசதாசிவமாறுமுகததசதிசுரனெழுமுகத்தை
உற்றதுருத்திரனெண்முகத்ததுவிண்டொன்பதுமுகத்ததுபிரமன் (௩)

தெய்வமாமணியின்சிறப்பிதிம்மணியைச்சிகையினிற்காதினிற்கழுத்தில், கையினிற்றரித்தலிதுசிகைமீதுகருத்துறத்தரித்தல்கோடிபலம, துய்யகாதணியில்நூறுகோடிபலந்துலங்குகண்டத்தினிற்றெடுக்கில், ஐயிருநூறுகோடிநற்பலங்கைக்கணிந்திடிலனந்தகோடிபலம். (௪)

௩-வது, சிவபூசைப்பரிச்சேதம்.

ஆகியதெய்வவுருத்திராக்கத்தினடைவெலாமறிந்தவாறுரைத்தேன்
மேகநேர்குழலாயாகமத்தியல்பான்மிகுசிவபூசையின்விதிகேள்
ஓகைகூர்சிவனைச்சரிதைநீள்கிரியையோகஞானங்களால்விருப்பம்
ஆகவேயாராதிப்பரிந்நாலுமடைவிலொள்ளொன்றுநால்விதமாம். (௧)

சரிதையிற்சரிதைசரிதையிற்கிரியைசரிதையிற்யோகமெஞ்ஞானம்
உரைசெயிலடைவினுதமேனையவுமோங்கியசரிதையாவதுதான்

திரமிகுகோயிலெடுத்தனந்தவனஞ்செயறிருமாலைகள்சேர்த்தல்
மருவியதீபந்திருமெழுக்கிடுதன்மற்றுமிப்படிவழிபடுதல். (௨)

கிரியையாம்பதத்திலிருமறைபுகலுங்கிருத்திவாசன்மகபூசை
இருவகையாகுமாத்துமார்த்தமுடனெழில்புனைபார்த்தமுமென்று
குருவழியிலிங்கந்தண்டிலங்கனிகங்குளிர்புனன்மண்டிலமென்ன
உனாசெயுமைந்துமாத்துமார்த்தப்பேருகந்துபூசனைசெயுந்தலங்கள்(௩)

இங்கிவிற்கணிகலிங்கமீராறுண்டெவையவையெனிலெழின்மணலும்
கொங்கலர்பூவுஞ்சந்தனமுஞ்சற்கோமயந்தானுமோதனமும் [ர்
தங்கியமாவுமக்காரமும்பழமுந்தடினிபின்மண்ணுமவெண்ணெயுஞ்சே
பொங்கியவுருத்திராக்கமாமணியும்புல்லுமென்றுகமம்புகலும். (௪)

எழின்மணன்முத்திசந்தனஞ்செல்வமிலங்கியமலர்பிணியின்மை
அழகியநற்கோமயம்பிணிநாசமன்னமண்ணுதிகாமங்கள்
பழமொடக்காரம்பிரியம்புற்றுனேபகர்மனோகரமுருத்திராக்கம்
தழைபலபலமாவெண்ணெயிட்டார்த்தந்தடினிமண்சம்புசாருபம். (௫)

சொலுமிதுகிற்கச்சகலருமீடேரும்படிதொல்பதிதோறும்
நலமிகுதேவரிருடிகண்மனிதர்நாமநூலாகமப்படியே
அலகறுபதிட்டைசெய்தவுஞ்சுயம்புவானவுமாகியவிலிங்கம்
பலவையும்பூசைபண்ணியிச்சித்தபலம்பெறுகின்றதுபராரத்தம். (௬)

இனையனவானவிலிங்கபூசனைசெய்திடுவதற்கருகமாயேற்கும்
துனியறுபஞ்சசுத்தியாகமத்திறசொல்லுமச்சுத்திகளைந்தில
புனிதநீர்தன்னைவிதிமுறையாடல்பொலிவுகூர்தேகசித்தியதாம்
அனையநீராடிவடதிசைநோக்கியதன்கரையேறியங்கிருந்து. (௭)

பரவுமத்திரமந்திரத்தினற்றிக்கைப்பந்தனைசெய்தநாமிகையாம்
விரலினல்வாமநாசியைநெருக்கிமெய்யில்வாழ்வாயுவைவலத்தும்
மருவுநாசியினலிரேசகஞ்செய்துமற்றதுதனைப்பெருவிரலால்
புரைவறநெருக்கிவாமநாசியினற்புலப்படப்பூரகம்பண்ணி. (௮)

நாசியினிரண்டுபுறத்தையும்வாயுநடையறவிரல்களானெருக்கிப்
பேசுகும்பகஞ்செய்திவ்வகைப்பிராணயாமமூன்றினைத்திடம்பெற்றுத்
தேசுறுபொன்மைவெண்மைமாசெவப்புச்செறிகருப்புப்புகைநிறமாய்
ஆசறுசதுரம்பிறைதிரிகோணமாறுகோணுழிமண்டிலமாம். (௯)

ஒழிவறும்பிரமாவாதியாம்பஞ்சமூர்த்தியேயூர்த்துவமுதலாய்
விழுமியதேவாய்மிகுலகராதிவிளம்புவீசாக்கரமுடைத்தாய்
எழில்புனைபாநீர்தீவளிவானென்றெண்ணுமைம்பூதத்தினிடமாம்
செழுமுழந்தாளுநதிகந்தரநெற்றிசிரமெனச்சிறந்ததேகத்தை. (௰)

அலகறுநிலமேயாதியாய்வீசாக்கரங்களேயடைவுறவிறுத்தி
நிலேபெறுமிதயஞ்சிரஞ்சிகைகவசநேத்திரமந்திரங்களுடன்
தலைமையாயோதிச்சிவமயமாகித்தழைத்தபாசுபதவத்திரத்தால்
கிலமுறும்படியேயழுந்தியேபஞ்சாக்கிராந்தியைசேதனஞ்செய்து (கக)

அங்கிபீசத்தாலாக்கையைத்தகனமாக்கியவ்வாக்கையினுள்ளே
தங்குமாவியைச்சங்காரமுத்திரையாற்றகவுறவறிவினுல்வாங்கித், துங்க
மாஞ்சிகையில்வியோமகருேதித்துலங்கியசைவதத்துவத்தில்,தங்கவொ
ன்ருக்கிவெந்திடும்புரியின்றன்மையாய்ப்பொலியு மிவ்வுடலில், (கஉ)

பேணியவமுதப்பிலாவனஞ்செய்துபிரணவயோகபீடமுமாய்
மாணுறுபிரமரந்திரத்தினில் வெள்வனசத்தையதோமுகமாக்கிச், சே
ணுறுமந்தவமுதிலான்மாவைத்திரம்பெறநனேத்ததாய்நினேத்து, பூணு
றுமுடலிற்பொருத்திலச்சரீரம்புகழ்ச்சிவசரீரமாய்ப்பொலியும். (௰௩)

சிட்டிசங்காரந்திதியெனுநியாசத்திறங்களின் விகற்பமோர் மு
ப்பத், தெட்டையுஞ்செய்துதன்னேயன்னிலேயி லெழிற்சிவனுகவேயெ
ண்ணித், தெட்டநாபியினில்வன்னிமண்டிலமுமிதயத்திற்சோமமண்
டிலமும், வட்டமாம்புருவநடுவினிலிரவிமண்டிலந்தானுமாய்வகுத்து.

இதயமாந்தலத்திற்பூசைசெய்துந்திபிடத்திலோமத்தினேவளர்
த்து, நுதனடுவாகத்தியானமுஞ்செய்துநுண்ணியவறிவினுலிதய, பது
மமேலுறையும்பராபரன்றன்னேப்பண்புசேராகமம்பகரும், விதியினு
லாராதனேசெய்யுந்திறனேவிளங்கியவாத்துமசுத்தி, (௰ரு)

தேசிகன் சிவன் சந்நிதியினிலிருந்துதிரம்பெறவொருகைநீள
த்தால், ஆசறவிளங்குமண்டிலமெழுதியதிலலங்காரவாபரணக், காசி
னிதனேயாவாகனஞ்செய்துகருதியவிதயமந்திரத்தால், பூசனேசெய்து
திக்கையும்பந்தம்புரிவதுதானசுத்தியதாம். (௰சு)

மருவியசராவங்கரகநற்படிக்கம்வலம்புரிமஞ்சனகும்பம்
விரைமலர்த்தட்டமருக்கியகலசம்வேறுமாமுபகரணமெலாம்
இருமையத்திரமந்திரத்திருல்விளக்கியிதயமந்திரத்திருற்பார்த்து
முரண்மிகுகவசமந்திரத்தாலேமூடியம்முறைகளாற்றிறந்து. (௰எ)

கங்கையுங்கரகந்தன்னேயநஞ்சுத்தசலத்திருற்பூரிதமாக்கி
அங்கதிற்பிரமமஞ்சையுஞ்சடங்கமதனேயுநியாசமாயமைத்துத்
தங்குசீர்வலக்கைத்தலத்திருலேவீசாக்கரநியாசமும்பண்ணி
மங்கலவிலிங்கமுத்திரையுடனேவனசமுத்திரையையும்வகுத்து. (௰அ)

வாய்த்தசங்கத்திற்பூரிதமாக்கிவைத்தமந்திரப்புனலாலே
பாத்திரமனைத்தும்புரோக்கணைசெய்துபண்புடனிருத்தியபின்னைச்
சூத்திரந்தவறுச்சந்தனம்புட்பந்தூபதீபங்களுங்கொடுத்துச்
சாத்திரப்படிப்பாரிப்பதுதானேதகைமைசேர்திரவியசுத்தி (மகூ)

சங்கராலயத்தைத்தேசிகனணைந்துசந்நிதித்தலத்துவந்தித்து
மங்கலக்கோயில்வாயின்மேலாகவலத்திடததினிலுமத்திமத்தும்
பொங்குமைங்கரவெண்கலைமகள்கமலப்பூமகளென்னுமூவரையும்
துங்கமானமனப்பூசனையாகச்சோடசோபசாரணைசெய்து. (உ0)

வாயிலின்வலத்தும்வாமபார்சுவத்துமங்கலக்கங்கைநந்தீசன்
ஏயசீர்புனையும்யமுனன்மாகாளனென்பவர்தம்மையர்ச்சித்துக்
காயும்வேல்விமலன்சுவாகுவென்போரைக்கதவினிற்பூசனைபுரிந்து
தூயசந்நிதியிலிடபவாகனத்தைத்துலங்கவாராதனைசெய்து. (உக)

நாமவத்திரமந்திரத்திறைக்கண்டாநாதமுஞ்செய்துபின்னிதயச்
சேமமந்திரத்தாற்றிருத்திரைநீக்கித்திரம்பெறக்கெற்பமந்திரத்தில்
ஏமுறவணுகிமுன்னைநாட்சாத்தியிருந்தநின்மாலியங்கழித்துத்
தோமறுபுதியநாண்மலரொன்றுதுலங்கியமுடியினிற்சாத்தி. (உஉ)

களைந்தனவெல்லாஞ்சண்டன்மேற்சாத்திக் கைகளையிலிங்கமந்திரத்தால், விளங்கவேகழுவியிலிங்கபீடத்தை விமலபாசுபதமந்திரத்தால், உளங்களிகூரநீடபிடேகமொருமையாற்செய்வதுதானே, வளங்கெழுமலர்சேர்கருங்குழன்மயிலேமகிமைசேரிலிங்கசுத்தியதாம். (உ௩)

மருவியபூசாவேளையிற்சகலமந்திரத்தையுநமவந்தம்
பிரணவமாதியாகவுச்சரிக்கப்பெறுவதேமந்திரசுத்தி
திரமதாமிந்தப்பஞ்சசுத்தியையுந்தெளிந்தவனேசிவபூசைக்
கருகனுஞ்சோமசூரியசரத்திலானபூசனைசெயலாகா. (உச)

நாசிகளிரண்டிஞ்சமமுறவாயுநடந்திடும்போதுசங்கரனைப்
பூசனைசெய்யிற்சபலமப்படியேபூசனைதான்செயுமிடத்தில்
ஏசறுசத்திசிவமெனுமிரண்டிலிங்கமும்பீடமுமாகித்
தேசொடுவிளங்கும்பூவொடுமணமுந்தேகமுஞ் சிறந்தசீவனும்போல்.

புனிதமாயொன்றுக்கொன்றுமேலாகப்பொருந்தனந்தாசனஞ்சிங்கா
சனமுடனேயோகாசனம்பதுமாசனம்விமலாசனமென்ன
வினியவாசனங்களைஞ்சுளவதன்மேலிறையையாவாகனஞ்செய்து
தினமுமாகமநூன்முறையினர்ச்சிப்பார்சேர்வர்சாமீபமாம்பதமே. உரு

இத்திறமெல்லாங்காரணாகமத்திலிருபதோடடுத்துநாலான
அததியாயத்திலருச்சனைப்படலத்தடைவுறவேபகர்ந்திடுமால்
மததவாரணத்தின்மருப்பெனத்திகிரிவாகமாம்புள்ளெனக்கனகச்
சித்திரகலசத்துணையெனவளருஞ்சிகரகுங்குமத்தனத்திருவே. (௨௭)

ச-வது, சிவதீட்சைப்பரிச்சேதம்.

சரிதையேகிரியையோகஞானமெனுஞ்சதுவிதபாதசித்திக்கும்
அருகமாந்திக்கைமகிமைமேகளாசானங்கியைசிவாக்கினியாக்கி
உரியமாணாக்காதம்மையன்புடனேயுத்தரமுகமதாய்வைத்துப் [யது.
பொருவருங்கரகந்தருப்பையைப்பதித்தப் புனலினாற்புரோக்கணைசெ

மிக்கவத்திரமந்திரத்தினன்மெய்யில் வெண்பொடிதூளனஞ்செய்திட்
டகுசப்புல்லாற்றுடைத்துமேதகுகாலாக்கினிமந்திரத்தாலே
முக்கியசரீரந்தனைத்தகித்துடனேமொய்சிலமுத்திரையாலும்
தக்கரிவனில்வீசாக்கரத்தாலுந்தகனமாமுடல்பரிசித்து. (௨)

இதயமந்திரத்தாலிதயமாதியதாயெண்ணுந்தானங்களைத்தொடுவித்
ததுகொடச்சீவ்பதத்தையுங்கொடுத்தாசாரியன்வலக்கரந்தன்னை
இதமுறயோகபீடமாய்ப்பண்ணியிட்டுவித்தேசாகுழ்ந்திடத்தின்
மதிமனோன்மணிவாழ்சதாசிவன்றன்னைமனங்கொடாவாகனம்பண்ணி

மருவுதேசிகனச் செங்கையை மூக்கான்மகிழ்ந்து மாணாக்கன் மத்தகத்தில், பரிவுறவைத்துச் சதுரமண்டலத்தைப் பண்ணிநீடருப் பையும்படுத்து, விரவுமீசான மந்திரநியாசமிக்க வெண்டிசையினும் பண்ணிக், குருபரன்சிவன்சன்னிதியில்வைதத கண்டகோடிவத்திரத் தினாற்சூழ்ந்து. (௪)

அந்தணர்முதலாநாலுசாதிக்குமபிநவநாமமுஞ்சாத்தி
முந்தியகுருவினிழலுடன்றனக்குமூத்தவர்நிழலிங்கநிழல்கள்
வந்துழிகடவாமலுஞ்சிவதீக்கைமருவிடாமடமகள்புணர்ச்சி [ம.
புந்தியிலெண்ணமையுஞ் சிவனூலைப்புறஞ்சொலிப்பழித்திடாதமையு

தேசிகனைப்பின் செல்கையும் பத்தர்திரத்தைநிந்தனைசெயாத மையும், ஈசுரநிருமாலியந்தொடாமையுமென்றெண்ணியசமயமோ ரெட்டும்,மாசறவுபதேசித்துநீடத்துவம்பதவருணமாவுபனம், ஆசிலா நன்மந்திரங்களையென்னுமத்துவாவாறறிவித்தும். (௬)

இலங்கியவித்தேசுரர்கணேசருலோகேசர்தேசாத்திரரென்னும்
வலம்வளர்தேவர்தமைக்குறித்தவர்தம்மந்திரத்தாவுதிபண்ணி
நலங்கிளர்பூசாங்கிரமமுந்திருத்திநற்குருநனிதுநீணிலத்தில்
வலஞ்செய்யும்படிமாணாக்கனுக்குபதேசிப்பதுவேசிவதீட்சை. (௭)

இன்னவெல்லாஞ்சப்பிரபேதமென்னுமாகமத்திலாகப்
பன்னியபடலத்துரைக்குமிப்படியேபசுபதிதீக்கைபெற்றவர்க்கே
மன்னியசரிதைகிரியையோகமுடன்மருவியஞானசித்தியெலாம்
கன்னிலத்தெய்துமிதரருக்கெய்தாநயனமற்றெவர்வழிநடப்பார். (அ

இ-வது, பசுபதிபாசசிவயோகப்பரிச்சேதம்.

பஞ்சிமெல்லடியாய்பசுபதிபாசப்பண்புகேள்பராபரமயமாய்
எஞ்சலில்வித்தைதத்துவத்திடைமின்றெழில்பெற வாத்துமாத்தோன்
றும், விஞ்சமவ்வான்மாசுத்தமாயொளியாய்விமலமாயறிவாய்விளா
கும்வஞ்சமாயையிலசூழ்ந்திடப்படலான்மற்றதுபசுவெனவழங்குட

ஆகியமாயைத்துவக்கிலான்மாவுக்காசையுமோகமுஞ்சுகமும்
சோகமுந்துயருங்கோபமுமிகுசந்தோடமுஞ்சகசமாய்த்தொடரும்
நாகவல்குலினயவைகளெண்பத்துநான்குநூறுயிரபேதப்
பாகுபாடானயோனியில்வந்துறப்பவிப்பதுமரிப்பதுமாகும். (உ)

செப்புழிச்சிவன்சிவன்றரிசனத்தாற்றீட்சையாற்சிறந்தபூசனை
யால், ஒப்பிலாயோகத்தாற்பெறுஞானவொளிவிளக்கைக்கொடஞ்ஞா
ன,வைப்பதாமிருளைத்துடைத்துமாத்தாண்டன்மறைத்தன்மாசறவிள
ங்குவதும், மெய்ப்படுகுடத்துட்டீபமக்குடந்தான்விண்டிடவொளிர்வ
தும்போல. (ங)

ஈசனதருளாற்பாசம்விட்டேகியிவனதாஞ்சகலகன்மத்தின்
வாசனையுடலைப்பற்றியேயிருந்துமடிந்துடன்மாண்டநாண்மாளும்
ஆசறுபெருங்காயம்பொதிபரணியப்பெருங்காயமாண்டுந்தான்
நாசமாமளவும்வாசனைவிடாமைநசிக்குநாணசிப்பதேபோல. (ச)

இத்தகைமையினற்சிவமயமெல்லாமியல்புறவறிந்துளசிவன்
முத்தர்கண்ஞானவிளைவினலந்தமூர்த்தியையடைந்திடுமுறைகேள்
பைத்தலையரவைப்பழித்தபேரல்குற்பவளவாய்க்குவளையந்தடங்கட்
கொத்தலரோதிச்சித்திரக்கொங்கைக்கொடியிடைக்கோமளக்கொம்பே

நற்செவிகண்மெய்நாசிநாவென்னுஞானவிந்திரியமோரைந்தும்
சொற்பதம்பாணிபாயுருபத்தந்தொகுங்கருமேந்தியமைந்தும்
சிற்செறியுமனம்புத்தியாங்காரஞ்சித்தமென்றுரைத்திடுந்தெளிவைத்
தற்செயுமந்தக்கரணமீரிரண்டுந்தகுதியாம்பகுதிதானென்றும். (ரு)

மருவியவன்னமயம்பிராணமயமனேமயம்விக்கானமயமே
பரவுமானந்தமயமெனுங்கோசபஞ்சமந்தானுமெய்ப்பரத்தில்
உரியதோலுதிரந்தசையுடனரம்புமுளைபெறுமூளைசுக்கிலமாய்த் [ம்.
தளையின்மேல்யோகசாத்திரமுணர்ந்தோர்தாஞ்சொலுந்தாதுசத்தகமு

சொல்லியவிடையேயிக்கலையோடுசுழுமுனையத்தினிக்குவைசிர்
புல்லுகாந்தாரிமெய்யலம்புருடைபுருடனோடுத்தசங்கினியாய்
வல்லபேருணருநாடியீரைந்தும்வன்னியாதித்தியன்மதியென்
றெல்லையாமுலகிற்பல்லுயிர்க்கெல்லாமிசைந்திடுமண்டலமூன்றும்.

ஓர்வரும்பிராணனபானனேவியானதுதானனேசமானனீனுகன்
சீரியகூர்மன்கிரிகரன்றேவதத்தனேதனஞ்சயன்றனைழக்கும்
பேரியலந்தரியாமிமுக்கியன்சீர்ப்பிரபஞ்சன்வயிரவனென்ன
வாரிதியுலகிலாரியோருணர்ந்துவகுத்துளவாயுவீரேழும். (கூ)

அகமுறுமூலாதாரமேசுவாதிட்டானமாய்விளங்குமாதாரம்
மிகுமெழின்மணிபூரகமநாகதமேவிசுத்தியாக்கினையெனவிளம்பத்
தகைமையாகியவாதாரமோராறுஞ்சாக்கிரஞ்சொப்பனஞ்சுழுத்தி
திசழ்வுறுதுரியஞ்சிறந்திடுந்துரியாதீதமாமவத்தைகளைந்தும். (ம)

மருவுசாத்திகராசதமொடுதாமதங்களாகியகுணமூன்றும்
விரவுமாணவமேமாயைகாமியமாமேவியமும்மலவிகற்பும்
திரமிகுவாதஞ்சேட்பமும்பித்தந்திறன்மிகுவியாதிகண்மூன்றும்
இருநிதிபுதல்வருலகமென்றிசைக்குமேடணையிரண்டிணேடொன்றும்

காமமேகுரோதமுலோபமோகமதங்கருதுமாற்சரியநீடிராகம்
ஏமமாத்துவேடமெனவிரித்தியம்புமிராகமென்பவையிருநாலும்
தோமிலாததூலஞ்சூக்குமமென்னச்சொற்பெறுசரீரங்களிரண்டும்
நாமநேத்திரநாசிகன்னமுடனுடியதுவாரமொன்பதுவும். (கஉ)

கூ-வது, சகளநிட்களப்பரிச்சேதம்.

இத்திறமுறையாலெண்ணு தொண்ணூற்றுறென்னு மிச்சரீர தத்துவத்தில், சித்தியையறிந்துசிவசொரூபத்தைத தெளிந்திடவேண் டுமத்திறத்தில், சத்திதான்சிவன்றன் சொருபநிட்களமுஞ்சகளமுஞ் சகளநிட்களமும், ஓதுமூவிதமாயிருக்குமங்கவற்றி ேறுதியநிட்கள முரைக்கில். (க)

நகைமணியனையாய்சாந்திசத்தியுடனுதமும்விந்துவுநாலாம்
சகளமுமீசனுருத்திரன்விண்டுசதுமுகனென்றுநால்விதமாம்
நிகரறுசகளநிட்களமிலிங்கநிருபணசதாக்கியதத்துவத்தில்
பகாமனேன்மணியாஞ்சததிசங்கதமாய்ப்பணைததிடுஞ்சதாசிவமாகும்.

செப்பியவந்தசதாசிவனுக்குத் திருமுடி யைந்துநாலுமுகம், ஒப்பறுகண்பன்னிரண்டுவாய் நாசியொளிகழுத்துறுப்பொருநாலும், மெய்ப்படுசெவியெட்டாக்கையொன்றிருதாள்விளங்கிய திருநிறமவெ ண்மை, இப்பெருஞ்சிவதத்துவங்களை முறையாலெண்ணின் முப்பத் திருமூன்று. (௨)

சாற்றியவவைதாமெவையெனிற்சிவன்றன்சத்திசொற்சதாசிவனீசன்
தோற்றியசுத்தவித்தியேச்சுரராஞ்சுத்ததத்துவங்களோரைந்தும்

ஏறமாமாயைகலையவியத்தமிராகமிந்தியையெழிற்காலம்
போற்றியங்கியதியெனப்பகர்மாயாபுஞ்சதத்துவங்களோரேழும். (௪)

பூதமைந்துத்தன்மாத்திரையைந்துபொருந்துகன்மேந்திரியத்திறமைந்
தேதமின்ஞானேந்திரியமைந்திதலாலெண்ணியகுணமகங்காரம
சேதனம்புத்தியென்றொருநாலுஞ்சிறந்தவிவ்வகையினாற்பூமி
ஆதியாஞானயோகியாகணிதத்தமைந்ததத்துவங்களுலாறும. (௫)

ஓதியவிந்ததத்துவமெல்லாமுணர்ந்துநீள்யோகசாதனையால்
ஏதமில்பஞ்சப்பிரமமுன்னுணர்ந்தோக்கெய்துமானந்தமாமுத்தி
மாதுகேளிதெலாஞ்சுப்பிரபேதவாகமத்தாதியாமபடலத்
தாதிரையான்பாலங்கரத்திருதாளானைபெற்றனுபதேசம். (௬)

எ-வது, சிவங்கின்மாலியவிசேடப்பரிசசேதம்.

மங்கலங்கலசக்கொங்கையாரணமாமடந்தையேயிங்கிதுநிறகச
சங்கரனிருமாலியங்கள்சண்டேசன்றனக்கெனமுன்னமேவிதிபெற்
றங்கவன்றன்கைக்கொண்டிடலானுமவறறையங்கிகரித்திடவுந்
துங்கநின்மலாவேறிலாமையினாலுநதுய்ப்பதற்கடாததானதலால். (௧)

ஏதமிறூயவாஞ்சிவநிருமாலியங்களைப்பழுதுளவாகச்
சோதனைசெய்துதுறந்திலருலகோர்சொலிற்பழுதங்கவைக்குளதோ
ஓதருங்கலைகள்கற்றுளோராவியக்குமொண்புகழ்க்கஞ்சனூராழ்வான்
மாதகவான்முன்னிப்பிரசங்கம்வந்ததோராபிரகரணத்தில். (௨)

அம்புலிதிகழ்செஞ்சடையினனுகந்தவன்னபானதிகளெல்லாம், டம்புரிரவன்றன்றசபுத்திராக்குப்பாங்குடன்கொளத்தகுமென்று, செம்பொருட்சைவாகமங்களினுள்ளசெழும்பொருண்முழுதுணர்ந்தனரா ய,நம்புதாற்பரியவிசேடமேகொண்டுநாட்டினரறிந்துகொணன்றாம்(௩

அ-வது, வீரமகேச்சுரப்பரிச்சேதம்.

வித்தகமயிலேயிதெலாநிற்கவீரமாமகேச்சுரசித்தாந்
தத்தினிற்பரமரகசியதத்துமைக்குச்சங்கரன்சொன்னவாசகங்கேள்,
உத்தமவிலிங்கதாரணத்தாலேயுயிருமவ்விலிங்கத்தினுருவாம்
அத்திறமெவ்வாறென்னிலமமிடாநீரங்கியால்வெமனமயாவதுபோல்.()

இனையனவிலிங்கசொருபமேன்மையெலாமியல்புறவறிந்திலிங்கத் தை
புனைபவன்றேகந்தனைத்துறந்தாவிபோயிடுமரணகாலத்தில் [ப்
அனையலிங்கத்தின்மூர்த்தியுமேருமாவியோடயிக்கமாகையினால்
பினையவிலிங்கம்பிரேதலிங்கமெனப்பெரும்புவிமீதுபோபெருமால்(௨

ஆவியினுடனேமூர்த்தியையிழந்தவாக்கையுமிலிங்கமுமாக
மேவியம்புவியையகழ்ந்துநற்சமாதிவிதிமுறைவைப்பதுமியல்பான்
மாவடுவகிர்நேர்விழியினையிதலால்வச்சிரசூசியினிடத்தும்
தாவரும்வீரசமயசித்தாந்தத்தன்மையின்பெருமைநீதான்கேள். (௩)

பேறுளசிவதத்துவஙகளையறியப்பெற்றவனேபிராமணனும்
கூறியவருணுச்சிரமதற்மத்தைக்கொண்டொருபயனுமிஙகில்லை [மம்
மாறியவுண்மைசசிவன்சொல்வாக்கியத்தை வைதிகாக்குணைப்பதக்கிர
தேறியசோகம்பாவனைதானேசிறந்தசீவனுக்குநன்முத்தி. (சு)

தாவரும்பிரமஙகாரணத்துடனேசஙகமமாகையினுலே
சிவபாவனையையடைந்ததததனையேதிரம்பெறத்தெளிந்துதான்றனே
மேவியபிரமமென்னுமிதறிந்தால்வீட்டுவேயெனுமேன்மை
தூவியோநிமமேகீட்டுபோகச்சூத்திரத்தினுமிதுசொல்லும். (௫)

மன்னுசாலோகமோடுசாமீபம்வாய்த்தசாரூபசாயுச்சம்
என்னுநாற்பதமுமட்டமாசித்தியென்பனமுத்தியென்றிசைப்பர்
பன்னுவேதாந்தஙகடந்தபின்சோகம்பாவனைசெய்வதுதானே
தன்னேநேரில்லாமுத்தியெய்பதுவுந்தழைத்தவச்சூததிரஞ்சாற்றும். ()

ஆதலாலிநதச்சிவமயமெல்லாமாகமத்தாலறியாமல், ஓதநீரவே
லைதம்மிலொன்றதிகமுண்டெனவுணாத்திடுவார்போல்,பாதிவெண்மதி
சூடியைத்தவிர்ந்தரியைப்பரனெனப்பகாவதேயென்ன, வேதமாமடந்
தையதறகுவெண்முறுவல்விளைத்துசிற்சிலமொழிவிரிப்பாள். (எ)

அ - வது, சைவாகமவிதிப்படலம் முற்றும்.

ஆ திருவிருத்தம்-அ௫

ஆ காண்டம்-உ-றுபடலம்-ய௬றுகூடியதிருவிருத்தம்-எ௫௬.

அரிதாசர்திருவடிகளேசரணம்.



சர்வம்விஷ்ணுமயம்ஜகத்.

# ௩-வது, உத்தரகாண்டம்.

## க - வது, வேதவேதாந்தவிதிப்படலம்.



### க - வது, வெண்ணீற்றைமறுத்தபரிச்சேதம்.

மருவியசடைமேன்மதிவளர்பெம்மான்மகிமையையின்னவாறு
ரைத்து, முருகவிழ்குழலாயாகமநூலேமுக்கிய நூலெனமொழிந்தாய்,
விரிவுளவேத நூலினிச்சயமும்விண்டுவின்பெருமையுஞ்சிறிதும், கரு
தலையிதுவுமொக்குமேசெம்பொன்கனவிறைற்காண்டல்கைப்புகுமோ()

தோகையேயுலகிற்சைவசித்தாந்தத்தொன்மையோர் குறைவற
ச்சொன்னுய், ஆகமஞ்சொன்னவதறகெலாமேனியா மெனவுத்தரிக்கி
ன்றேன், ஓகைகூாவேதபுராணசாததிரத்தாலுரைத்துளவுத்தரமுரை
க்கேன்,நீகுறிக்கொண்டுகேளெனக்கல்விதிலையிஞணிசழ்த்துவதாளுள்

வெண்ணிறநீற்றின் மகிமையு மணிந்தால்விளைந்திடும்பலன்களுமுரைத்தாய், என்னுமங்கீற்றின்விசேடமாகமத்திலியம்பியதிருகசுவிப்புவிமேல், நண்ணியசெஞ்சொலதருவசிரத்தினவின்றிடுந்தன்மைகேணறும்பூ, வண்ணவாரளகவல்லியேயந்தவண்மைசேரதருவ சிரத்தில்.

ஆதிகண்டத்தில்விண்ணவர்தம்மோடந்திரியாமிமாலெனக்கென், றோதியசிவனுக்குவாசனைதன்னையுரைத்திடும்பஞ்சமகண்டத்,தேதமின்றியவப்பசுபதிதிட்சைக்கிலக்கணநீறெனமொழிந்து,வேதியர்களெல்லாமந்தவெண்ணீற்றைவிதித்திலாமுறைமையினாலே. (ரு)

தக்கவெண்ணீறு வேதியர்க்கெல்லாஞ் சகலசாதாரணமன்று, மிக்கவங்கீற்றையநருகமென்றுவெகுவிடத்துரைத்திருக்கையினும். தொக்கமாமறையில்விதிப்பதேதென்னிற்சொலுமக விரதயாகததில்புக்கநற்பிரமசாரியோடசதிபுணர்நதிடத்திகிரடிப்பதுவும். (ரு)

வைப்புளசவித்திராமணிமகந்தன்னின் மதுவையேயருந்துதறுனும்,மெய்ப்படுநீதிவேதியர்தமககுவிகிதமென் றுரைப்பதேபோலச்
செப்பியபாசுபதவிரதத்தின்றீட்சையின்மாதிரத்துக்கே.
ஒப்பறுநீறுமுக்கியமதுவுமுரியதச்சிவமறையோர்க்கே. (சு)

அறுத்தியால்விளைக்குமோமவேலையினிலக்கினிகோத்திரநீறு
தரிப்பதந்தணர்கள்சகலருக்குஞ்சாதாரணமல்லவோவென்னில்
விரிதிடுஞ்சதாககமிருநிவெண்ணீறுவீறியசைவாகளுககே
சிரததினிறறரிககவிகிதமென்பதனைத்திருத்தமாயுரைததிடலாலும். (எ)

வேறுளசகலமிகுதியுநீறுவேதியர்க்கநருகமென்று
கூறுகையாலுமதுசகலருக்குங்குறிப்புடன்றரிக்குமதென்று
தேறியவந்தநீறுதான்முக்கட்சிவனையாதரிப்பவர்சிலாக்கு
மாறிலாவுலகிற்சூததிராதமக்கேமதிப்புடன்வகுததவாசாரம். (அ)

உ - வது, திருமண்காப்பு என்கிற ஊர்த்துவபுண்டரப்பரிச்சேதம்.

ஓதுமூர்த்துவபுண்டரமதேமறையோர்க்குரியதவ்வோங்கு புண்டரமே
நீதியாலணியவிகிதமென்பதற்குநீறவர்க்கடாததென்பதற்கும
ஏதமினீறுசூத்திராதியர்க்கேயிசைந்தவாசாரமென்பதற்கும்
வேதசாத்திர நூலின்பிரமாணவிதங்களைநான்விளம்பககேள். (க)

வேறு.

பொன்னியலாகமமயிலேபொலிவுபெறுந்திருமண்ணைப்புகழ்ந்துபோற்றி, உன்னையினிதணிகின்றேன் காப்பாகவெனக்கருணீ யுதவென்றுன்னி, மின்னெறில்சேரூர்த்துவபுண்டரந்தன்னைநீடுமெசுவேதந்தன்னில்மன்னியவாரணத்தாறும்பருச்சத்திலாறியனுவாகங்கூறும்

தாரணியிலூர்த்துவபுண்டரமினிதுதரிப்பாரைச்சகலலோக
காரணனுநாரணனெத்துன்பமுமெய்தாதபடிகாக்குமென்றும்

சீரணியுஞ்சொல்லிருக்குவேதத்திற்றெளிவுபெறச்செப்பாநிற்கும்
வாரணியுந்துணைமுலையால்வஞ்சியெனத்துவளிடையைவருத்துமாதே

சீதரனுரிணையடியின்சீர்மைபெறவிடைவெளியுந்திருத்தமாக
மீதுயாபுண்டரமணிவாரந்நெடுமாறிருவுள்ளம்விரும்பப்பெற்றுப்
பாதகமெலாந்தொலைத்துப்பரமபததானந்தம்பயில்வாரென்று
மாதுநல்லாயவேதாந்தமெண்ணுன்கினுளாததகடவல்லிசொல்லும்(சு)

தாழ்வறு சீரூர்த்துவபுண்டரந்தன்னை விதிப்படியேதரித்துக்கொண்டு, வேழ்விவடிவாகியநாராயணனாராதனையைவிரும்புகின்றார், வாழ்வுளதங்குலதரோரை யேழுதலைமுறையளவுமனத்தால்வாக்கால், சூழ்வினையைப் பற்றறுத்துப் பரகதியையடைவிப் பார்துணையாயென்றும. (ரு)

அன்னியதேவதைகளிடததம்புளராயிருந்தாலுமனைவோருக்கும்
மின்னியநீளபுண்டரமேவிதி மறையோர்தங்களுக்குமிகவிசேடம்
என்னமொழிந்திட்டதுதானெசுவேதச்சாகையினிலிதுமட்டன்றிப்
பன்னுமகோபனிடத்துமூர்த்துவபுண்டரமகிமைபகருமாதோ. (சு)

அந்தணர்சத்திரியருக்குப்புண்டரமும்வணிகர்குலத்தவருக்கந்தச்
சந்திரரேகைப்புமபிரமசாரிக்குச்சந்தனமுஞ்சன்னுசிக்குக்
கந்தமொடுவெண்ணீறுதரிக்குவதெக்காலத்துங்காப்பன்றென்றும்
கொந்தலருங்கருங்குழலாய்தாபனியோபனிடத்திற்கூறுமன்னே. (எ)

மெய்த்தியல்சீரூர்த்துவபுண்டரத்துக்குவேதவேதாந்தத்தாலே
இத்துணைநற்பிரமாணமியையவுரைத்தேனிந்தமறைகட்கேற்கச்
சித்திரமாமயிலனையாய்புராணமொடுசங்கிதைசாத்திரங்களாலே
வைததபிரமாணமுநானுரைக்கின்றேனதனையுநீமனத்துட்கொள்வாய்.

வீசுபுகழ்நாரதனைவேதவியாசன்பரவிவிமலனேநற்
றேசுபெறுமூர்த்துவபுண்டரவிதியுந்தலங்களுமந்திரங்கடானும்
ஆசரிசகுமடைவுமதிதேவதையுந்தியானமுமிங்கடைவதாகப்
பேசுகெனசசுருதியெலாம்வீணையினுறைதஞ்செய்பெரியோன்றனும்.()

ஓதுமறைகளைகண்டமுனியேகேளூர்த்துவபுண்டரந்தான்சொல்லிற்
றுதுசெறிபதுமாகாரங்கூருமாகாரஞ்சங்காகாரம
தீதறுமச்சுவபத்திராகாரமவேணுபதிரந்தீபாகாரம்
போதவருமால்சரணவாகாரந்திந்திருணிபுட்பாகாரம். (ய)

இன்னனவாமூர்த்துவபுண்டரங்களெல்லா மந்தணர்க்கேயியல்புமற்றைப், பன்னியசொற்பதிதருக்குஞ்சூத்திரர்க்குங்குறுக்கிடுதல் பண்பதாகும், என்னமரபினரொனினுமெம்பெருமாற்கன்புளராயிருப்போர்கெல்லாம், மின்னுதிருமண்குறியா யூர்த்துவ புண்டரமிடுதல் விதியதாகும. (கக)

மற்றுமிந்தப்புண்டரங்களிடுமிடத்திலுயர்திருமண்மறையோருக்கும், கொற்றவர்க்குச்சந்தனமும்வணிகருக்குவில்லுவத்திற்கொண்டவேரும், வெற்றிபுனைசூத்திராக்குவெண்ணீறுவிதிநாலுவிதசாதிக்கும், தெற்றெனவாந்திருமண்ணுஞ் சந்தனமுங் கொடுததிலகந்தீட்டலாகா.

வில்லுவமும்வெண்ணீறும்வணிகருக்குஞ் சூத்திரர்க்குமொழிந்துமேலாய்ச், சொல்லுமிருகுலத்தோர்க்குத்தகாதுதிருமண்ணடைவுதோன்றக்கூறில், எல்லமைபொன்வெண்மைகறுப் பிரத்தமுடன்பச்சையிவையென்றைம்பேதம், நல்லவற்றிற்சுக்கிலமாகியதிருமண்டலமிதற்குநாட்டுங்காலை. (௰௩)

பொங்குதிருமால்வாழும்புண்ணியதேசங்களினும்புனிதநன்னீர்க்
கங்கைமுதலாகியபன்னதிக்கரையினுந்துளவங்கமழுமூலத்தும்
தங்கியநற்றிருமண்ணேவிசேடமிவைதமைத்தரிக்குந்தலம்பன்மூன்று
துங்கமிகுமீராரெட்டோராறுநாலொன்றாச்சொல்லாநிற்கும். (க௪)

மங்கலமாகியநெற்றிவயிறுமணிமார்புகளம்வலப்பாலுந்தி [ல்
துங்கவலத்தோளதன்மேல்வயிற்றினிடப்பாகமிடத்தோ டோளின்மே
தங்கியகிழவெரிந்பிடரிதலையாகும்பதின்மூன்றாய்ச்சாற்றுந்தானம்
இங்கிவற்றினுச்சிதவிர்ந்திடுவதுபன்னிருநாமமெழுதுந்தானம் (க௫)

பெருங்குறிகளீராறிற்பிடரியுங்கந்தரமுமுயர்பெறுமேற்றோள்கள்
இரண்டுமொழிந்திடிற்றிருமணிருநாலாயெழுதுவற்கேற்றதானம்
திருந்தியதோள்களுமார்புநெற்றியுமாறீரிரண்டாய்த்தீட்டுந்தானம்[ம்
பொருந்தியநெற்றித்தலமேயொன்றாகவெழுதுவர் புண்டரத்தின்றான

கிளரொளிசேர்புண்டரங்கள்பதின்மூன்றாயிடுமிடத்திற்கேசவாதி
வளமைமிகுநாமமெல்லாமந்திரங்கள்வாசுதேவாந்தமாக
ஒளிகிளரும்புண்டரங்களீராறாயிடுமிடத்திலோதுநாமம்
தெளிவுருகேசவனாதிதாமோதராந்தமுமந்திரங்களாகும். (க௭)

இருநாலாய்ப்புண்டரங்களெழுதிடத்தின்மந்திரமெட்டெழுத்தேயாகும். திருநாமமதுசூதநாந்தமிருமுக்குறிமந்திரங்களாகும், ஒருநாலாகியகுறிக்குக்கேசவனச்சுத னனந்தனுயர் கோவிந்தன், வருநாமமொற்றையெழுதுங்குறிக்குக்கேசவமந்திரமேமன்றே. (க௮)

அங்குட்டம்பொருணல்குமநாமிகைமைந்தனையருளுமாயுடன்னைத்
தங்குகனிட்டிகையுதவுநதர்ச்சினியங்குலிமுத்திதனையேநல்கும்
இங்கிவைங்குலிகளிவற்றாற்றிருமணிலங்குகுறியெழுதுவார்க்குப்
பொங்குபலன்மத்திமவங்குலிகொடுபுண்டரங்கள்புனைதலாகா. (க௯)

ஏதொருநாமத்தாலேபுண்டரங்களிடவிதியிட்டிசைத்ததந்தத்
திதறுநாமப்பொருளேதியானிக்கப்படுமூர்த்திநிகழ்வுகூற
ஓதியநீள்புண்டரத்தைத்தரித்தரியாராதனைசெய்துளங்களிப்பார்
மேதைமிகுபாகவதரவரடைவாபரமபதவிண்டுலோகம். (உ0)

இந்தரகசியப்பொருளையிசைத்தனமின்றுனக்கென்றுனிவனையவெல்லா
முந்துபுகழ்நாரதியபுராணத்திலறுபதுடனென்பதாக [ம்
வந்திடுமத்தியாயத்திலறிந்திடலாமடமயிலேமற்றுமிந்த
அந்தமில்சீர்புராணத்திலெழுபதுடனைந்தாமத்தியாயந்தன்னில். (உக)

நாரணனன்முகனுடனேநான்மகிழ்த்தாந்தமக்கு நலமாகத்தா
ன், ஏரணியுமூர்த்துவபுண்டரந்தரிப்பாமுத்தவொன்றெனெண்கணனு
ம,சீரியமாமுனிவருடனூர்த்துவபுண்டரந்தவிர்ந்துசெய்யாகின்ற,ஏரம
ருமநுட்டானமபலியாமலொழிந்திடுமென்றிசையசசொன்னான்(உஉ

மலைமகளோடுருத்திரனுமங்கலமாம்பூரணபாவன மாகத்தான்,
நிலவியநீளூர்த்துவபுண்டரந்தரிப்பாபரமபதநேர்வனொன்றன்,உலகு
புகழிந்திரனூர்த்துவபுண்டரமிமையோர்க்குபதேசித்தான், அலகில
வக்கினிதேவுநதென்புலத்தார்க்கெல்லாமீதறியசசொன்னான். (உ௩)

தேவாகளுமுனிவர்களுந்தென்புலத்தோர்களுந்தம்மைசசேர்ந்
தோர்கெல்லாம, மேவியவவ்வூர்த்துவபுண்டர மகிமையுபதேசம்விள
ங்கசசெய்தார,பூவுலகுந்தாழுலகும்பொன்னுலகுமுதலாய்புவனத்துள்
ளோர,யாவருமவ்வூர்த்துவபுண்டரராகிமகிழ்ந்தனரொன்றியம்புமாதோ

இலகியநீளபுண்டரத்தைநெற்றிகருளிடை வெளியிட்டெழுதாதா
னும், சுலவுறமுப்புண்டரத்தைததரிப்பானுஞ்சூத்திரனேயனையாவெ
ன்றும, தலையினிலோ டெலும்புமயிர்சங்குமணிகற்சாம்பாதரித்துநெற்
றி, நிலவுதிரிபுண்டரத்தையணிந்திடுவா ரதமாகனிநிலத்திலென்றும்.

வேதியர்தங்குடிப்பிறந்துமவிடத்தைநுகர்வாருமனைவேவத்தீயிட்
டாதலரன்கணமணிமுட்புண்டரந்தானிலிங்கமிவையணிவாராகில்
நீதியிலாவிவர்தம்மைமுறைமையினனிலம்புரக்குநிருபர்தங்கள
பூதலததினெல்லைகடந்திடும்படிக்குப்போக்கவிதிபுகலுமென்றும் உ௬

மேனிடுபுண்டரததையணிநதுசெபஞ்செய்தனல்வேட்டல்வே
தம,தானேதல்தென்புலததோாதமைத்தணித்தல்சந்தியில்வந்தனைகள
பண்ணல், நானாவாந்தானங்கள்கொடுத்தவெலாமநந்தபலனல்குமென்
றும்,ஆனோர்புண்டரமன்றிச்செயததவநுட்டானங்கள்பலியாவென்றும.

நாஸியல்பாறசிராத்தஞ்செய்காலத்துநுகர்வார்க்குநுகர்விப்பார்க்கும்
மேலுமுயர்புண்டரங்களெழுதுவதுவிதியென்றுமெழுதுங்காலைப் [டி
பாவிரண்டிரண்டுவிரலிடைவெளியோரிரண்டு விரல்பகுத்துக்கூட்
நாலுவிரல்விசாலத்தானுசிமுதற்கேசாந்தநடததவென்றும். (உ அ)

இத்தகையபுண்டரங்களிலக்கண மல்லா தெழுதவியல்பன்றெ
ன்றும், மத்திமத்தில் வெளியின்றி யெழுதுகுறி யுத்தமர்க்குவழங்கன்
றென்றும், முத்துநிரையென மூலைமுகையினணிதானென்ன முரு
ந்துவாயத்த, பத்தியென வொளிர்நகையாய் பராசரசங்கிதைதன்னிற்
பகுத்துக்கூறும். (உகூ)

இருவிரலினகலமிடைவெளியிட்டுப்பககங்களிரண்டுமோரோர்
விரலகலமெழுதுவதூர்த்துவபுண்டரந்தனக்குவிகிதமென்றும்
மருவுமிடைவெளியின்றியூர்த்துவபுண்டரமொருவன்வனைந்தானுகில்
அறிமருவுபரமபதமாகியவைகுந்தமவனடையானென்றும். (௩ ௦)

தக்கதிரிபுண்டரத்தைவிநோதத்தாலானுலுந்தரிக்குஞ்செய்கை
மிக்கமறையந்தணர்க்குவிதியன்றஙகதுதரித்துவிட்டானுகில்
அக்கணமேபதிதனெனவறையுமரிசசிப்பெயரோனமுதவாக்குத்
தொக்கமிருதியிலிசைக்குந்தும்பியினம்பம்புகுழற்றோகைநல்லாய்.௩க

தருமறையோர்குடிப்பிறந்துஞ்சங்கரனையருச்சித்துந்தமதுமெய்
யில்,மிகுதிரிபுண்டரமணிவாரந்நிலேயயதமர்களாய்விடுவரிந்தத, தொ
கைபெறுமாசாரமெல்லாஞ்சூத்திரர்க்கும்பதிதாகருஞ் சொன்னதென்
று, மகிமைபுளவாசிட்டசங்கிதையில்வெளியாகவகுததுக்கூறும்.(௩உ)

போசனந் தானந்தவந் தென்புலத்தோரைத் தணிக்குதனெய்
பொழிதீவேட்டல்,ஏசறுமூர்த்துவபுண்டரந்தரித்தாற்பலன்றருமிதன்
றிச்செய்வார், நீசரினுங்கடையவர்கடமதுமுகமசானத்தை நிகர்க்குமெ
ன்றும், வீசுபுகழுலகோர்க்குநீதிவரபாற்கவனூர்மிருதிசொல்லும். ௩௩

உன்னுமுபவீதமொடுசிகரபந்தமூர்த்துவபுண்டர மில்லானும்
மின்னுபவித்திரமணியாக்கரத்தானுஞ்செய்யுந்தருமவிதங்களெல்லாம்
இந்நிலத்திற்பலஞ்சிறிதுமில்லாமலொழியுமெனவெழில்வேதத்தின்
மன்னியநுண்பொருளாகிவளர்விண்டுமிருதியிலேவகுத்துக்கூறும். ()

வேதபாராயணஞ்செய்வேளையினும்வேள்விதனைவிளைக்கும்போதும்
தீதறுபோசனநுகருங்காலத்துஞ்சுபகருமஞ்செய்யுந்தோறும்
பூதபிசாசுகளணுகாவண்ணமிகுமூர்த்துவபுண்டரந்தரித்தல்
நீதிமறையவர்க்கென்னவிருத்தமனுத்திருத்தமுறநிகழ்த்துமன்றே.

பேசுமறையோர்க்கூர்த்தபுண்டரமுமரசருக்குப்பிறையின்கீற்றும்
தேசுபெறுவணிகருக்குவட்டமுஞ்சூத்திரர்க்குத்திரிபுண்டரந்தான்
பூசுரர்கண்மறந்துமந்தத்திரிபுண்டரந்தரியார்பொய்யிலாமற்
றுசரித்தலியல்பல்லென்றுரக்கினியவேசிகிரியறையுமன்றே. (ௗசு)

உத்தமமாமந்தணர்தமொளிர்குலத்தி லுற்பவித்து மொழுக்கங் குன்றச், சத்திரத்தையெடுப்பானுமததிரத்தைத்தரிப்பானுந்தனுக்கொ ள்வானும், சூத்திரத்தாற்பிறர்பொருடெய்த்துந் திரிபுண்டரந்தரித்துங் குறியிலோராதாம், இத்தலத்தி லதமரெனச் சாபாலமிருதியினி லிசை கருமாதோ. (ௗஎ)

எவ்வேளையினுமறையோரூர்த்துவபுண்டரமெழுதலியல்பதாகும்
அவ்வோரகடமைக்கண்டாலந்தகன்றன்கிங்கரர்களாறோரெல்லாம்
வெவ்வேகநாகத்தைக்கண்டடங்குந்தவளைகளாய்விளங்குமெய்ம்மை
மைவ்வேரிமிகுங்குழலாயபிரமவிராத்திரிதன்னில்வகுத்துக்கூறும். ()

மேலுயாபுண்டரமொருவனிடைவெளியிட்டணிந்திடிலவ் வெ ளிதானேயம், ஆலயமவ்வாலயத்திற்றிருவொடுநாமகிழ்ந்து றைவோம துசெய்யானேல், ஏலுமலாமங்கையையு மெய்மையு மெப்பொழுது மவனிகழ்நதானென்றும், நாலுமுகற்குத்திருமால்கூறியதுபிரமாண் டநவிலுமன்றே. (ௗகூ)

தாரணியிற்பாடண்டதரிசனமும்பரிசனமுஞ்சம்பாடிக்கும்
காரணமுந்தரும்பாவமூர்த்துவபுண்டரபலத்தாறகழியுமென்றும்
பூரணமாம்பராசரனாமிருதியும்போதாயனமுமபுவனமீது
சீரணியும்பிரமாண்டபுராணமுஞ்சநதேகமறசெப்புமாதோ. (உ0)

நிவந்திடுபுண்டரங்கடமக்கடுத்தது வெண்மிருத்திகையாய் நின் றதாலும், தவந்திகழ்கங்காதீரராரியா மற்றுந்தேசாந்தரத்திலுள்ளார், உவந்திடுதத்துவாதியருமாயாவாதியருமெனவுயாந்தோரெல்லாம், செவ ந்தமிருத்திகைதரிக்குங்காரணந்தானேதென்றுசிந்தைசெய்யில். (உக)

ஓதியவம்மிருத்திகைதானுடனேகாமியங்களெல்லாமுதவுமென்றும்
தீதறுமக்காமியத்தின்பலங்களிலேபற்றில்லாச்சிந்தையோருக்
கேதமிலாமுத்தியையீய்ந்திடுமென்றுமபலநூலுமியம்பலாலே
மேதகுசெமமிருத்திகையுமூர்த்துவபுண்டரங்களுக்குவிசேடமாமே. ()

என்றுபலபிரமாணமெழில்புனையாரணவல்லியியம்பக்கேட்டு, மன்றறருங்கருங்குழலாகமவல்லியதற்குமறுமாற்றஞ்சொல்வாள், நின் றிலங்குதிருநீற்றைநிந்தையெனவிதிபினனீதிமேன்மை, துன்றுமறை யோர்கடெல்லாந்தரித்திடலாகாதென்றுதொகுத்துச்சொன்னாய் (உஙு)

## ௩-வது, திருவிலச்சனைப்பரிச்சேதம்.

மின்னியவந்தணாமேனிவடுப்படலாகாதென்றுமிருதிதோன்றச்
சொன்னதிருக்கச்சங்குசக்கரமுந்தழன்முகத்தாற்றேளிற்சாத்து
நன்னிலத்தின்மறையோராசரிப்பதற்குப்பணியேதுநால்வேதத்தில்
அன்னதற்குவிதியெங்கேயென்றுரைப்பமறைவல்லியறியசொல்வாள

ஆயுதத்தின்வடுச்சூதிலானவடுத்தீவடுவென்றமைந்தழுன்றும்
சேயமறையோர்க்காகாவென்றியாச்சவற்கமிருதியினிறசொன்ன
வாய்மைதனைப்பொருளறியாதுரைகின்று யிதனைமாமறைகளுன்கும
ஏயதிருச்சக்கரலாஞ்சனைவிதித்ததனையெல்லாமியமபக்கேணீ. (௨

கொங்காருங்குழன்மயிலேகுவலயத்துளந்தணாதஙகுலத்துளோர்க்குப்
பொஙகாழிவலததோளுமிடத்தோளில்விளங்குவலமபுரியுமாக
மஙகாதபரமபதவாழ்வுபெறததரிததிடுவர்மகிமேலென்ன
இஙகாருந்தெளிபிரமசூத்திரததின்மகோபனிடமிசைக்குமன்றே. (௩)

இருபுயத்திற்சங்காழியிலச்சனைபெற்றினிதிருப்பாரிகலோகததில்
பரமபவிததிரராகிமாலருளால்வைகுநதம்பயில்வரென்றும
அரிமருவுபூஙகுழலாயிருக்குவேததேழாமட்டகத்தின்
மருவியநாலாமததியாயத்தெட்டானவனுவாகங்கூறும். (௪)

வேதனுக்குந்தந்தையாயப்பல்லுயிர்க்குமந்தரியாமியுமாய்நின்ற
மாதவன்றன்சக்கரமும்வலம்புரியும்வலததோளும்வாமத்தோளும்
சோதிபெறவனன்முகத்திற்றரிப்பவாகளபரமபதந்தொடாவா ரென்று
கோதைநல்லாயெசுரவேதாரணத்தின்முதறபருசசமதுகூறு மன்றே.

செய்தபெருந்தீவினையாற்பிறந்திறந்துதடுமாறுஞ்சீவனெல்லாம்
மைதிகழுந்திருமேனிமாலாழிவலம்புரியைவளாதோள்சேர்க்கில்
உய்திரமாம்பரமபதமடைவரெனச்சாமத்துத்தரவிருக்கில்
எய்துமொன்பதானவத்தியாயததிலிசையுடனேயியம்புமன்றே. (௬)

உலகவியாபகனுகியோஙகுநெடுமாயவனுயுதங்களான, இலகு
வளையாழிபெறுமிலச்சனையையிருதோளிலெழுதிக்கொள்வார, தொலை
வறுதம்பாவமெல்லாந்தொலைத்தகலாவெமபாசந்துரந்தோர்நண்ணி, அ
லைவொழியும்பரமபதமடைவொனவதருவம்பண்பாகக்கூறும். (௭)

மற்றுமதருவந்தன்னின்மாலாழிவலம்புரியைவளர்தோள் சேர்த்துப், பொற்றடந்தேரிமையவர்கள்சுவர்க்கவுலகந்தன்னைப் புரந்தாரென்றும், கொற்றமிகுமனுக்களெல்லாங்குவலயத்தையாண்டுகளிகூர்ந்தாரென்றும், சிற்றிடைப்பேரகலல்குற்செஙகனிவாய்க்கருங்குழலாய்செப்புமன்றே. (௮)

முததியையிச்சித்தசிலர்மோகபவக்கடல்கடக்கமுயர்ச்சியாலே
அத்திருமால்சங்காழியிருபுயத்திலழகாகவணிவொன்றும்
தத்தையெனுமொழிமயிலேசிலரவன்பஞ்சாயுதமுந்தரிப்பாரென்றும்
வைத்தபுகழ்வெகுவிருக்கில்வற்கலசங்கிதைவிளங்கவகுக்குமன்றே(௯

விரவலர்கள்சததியெல்லாம் வெற்றிகொண்டு மால்கரத்தில் மேவுமாழிப், பொருபடையின்குறியிருதோள்புனைந்திடுவார்தம்பாவபுஞ்சமெல்லாம், துரிசறுத்து முத்தர்களாய்த் தொலைவில்பரமானந்தத் துயப்பாரொன்று, பரிபுரமெல்லடிமானே பயில்பிருகதாரணியோபநிடங்கூறும். (௰)

நெஞ்சமெனுங்கமலத்திலுறைமாலை மகிழ்ந்துதியானிப்போர்க்கெல்லாம், விஞ்சுமுயாபுண்டரமுந்திகிரிவலமபுரிக்குறியும்விரும்பிநாளும், தஞ்சமதாகத்தரிக்கவிதியதுவேமுத்தியின்சாதனமுமென்று, வஞ்சியெனததுடியென்னத்துவளிடையாயவயங்குகடவல்லி சொல்லும்()

மாலேந்துபவித்திரமாம்வலம்புரியுஞ்சக்கரமும்வளர்தோள் சேர்ப்பார்
நாலாயபுருடார்த்தம்பெறுவரெனக்காடகமுநவிலாநிற்கும்
மேலாஞ்சங்காழியிலச்சனைசோபுயதொடுவிண்டுவைத்துதிப்பார்
தோலாதபரமபதத்திருப்பாரெனுங்கைவலியத்துங்கசாகை. (௧௨)

இக்கனையமொழிநல்லாயிங்குரைத்தவேதங்கட்கெல்லாமேற்கச்
சக்கரமும்வலம்புரியுந்தடந்தோள்களிரண்டினிலுந்தரித்துமன்றன்
மிக்கவுயர்புண்டரத்தைவிதிப்படியேயணிந்தவர்கள்வினைகடந்து
தக்கபுகழ்பரமபதஞ்சாரவரெனவிருத்தமனுதன்னிற்கூறும். (௧௩)

ஆதனமுஞ்சயனமுமேயொழிந்துபசுபாத்திராதிகளுக்கெல்லாம்
ஏதமிலாச்சங்காழியிலச்சனையையிடம்வலமாயெழுதாநிற்பார்
மாதவன்றன்பரமபதவைகுந்தத்திருநாட்டில்வாழ்வரென்று
வேதமொழியின்பொருளையநுசரிக்குஞ்சாண்டிலியமிருதிகூறும். (௧௪)

கனத்தபுயமிரண்டினிலுஞ்சங்காழியாகுதல்சக்கரமேயாதல் [தங்கள்
மனத்துவகையுடன்றரிப்பாரவண்டுளவத்தொடையாற் காவணமாய்த்
வினைத்தொகுதிபற்றறுத்துமிக்கபரமானந்தவெள்ளத்துள்ளே
அனித்தமற்றுமூழ்குவரொன்றினிதுரைக்கும்பதுமப் பேரமர்புராணம்.

சங்கொடுசக்கரமிரண்டும்புயங்களினுமுச்சியினிற்சார்ங்கவில்லும்
துங்கமிகுநெற்றியிற்றண்டாயுதமுமிகயத்திற்றுலங்குவாளும்
இங்கிதர்களாயிருப்பார்க்கரிதாயபதமெளிதேயாகுமென்று
பொங்களிகளலம்புமலர்ப்புரிகுழலாயாக்கினியபுராணங்கூறும். (௧௫)

